ஆசிரியர்: சுவாமி தன்மயானந்தர். துணை ஆசிரியர்: சுவாமி கமலாத்மானந்தர்
பதிப்பாளர்: சுவாமி தன்மயானந்தர், ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004.
அச்சிடுபவர்: R. கிருஷ்ணஸ்வாமி, ஸ்ரீமதி பிரிண்டர்ஸ், 3/20 மவுண்ட் ரோடு சென்னை 600 002

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

| தொகுதி—60 | ஏப்ரல் 1980 | இதழ்—4 |
|---|---|---|

## பொருளடக்கம்



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை

—திருமூலர்

தொகுதி 60 || ரௌத்திரி ஹு சித்திரை மீ || இதழ் 4



अशनं गरलं फणी कलापो वसनं चर्म च वाहनं महोक्षः ।
मम दास्यसि किं किमस्ति शम्भो तव पादाम्बुजभक्तिमेव देहि ॥

அசனம் கரலம் பணீ கலாபோ வஸனம் சர்ம ச வாஹனம் மஹோக்ஷ: ।
மம தாஸ்யஸி கிம் கிமஸ்தி சம்போ தவ பாதாம்புஜபக்திமேவ தேஹி ॥

—சிவானந்த லஹரீ - 87

சம்போ! தங்களுக்கு உணவு விஷம். பாம்புதான் ஆபரணம். உடையோ தோல். வாகனமோ பெரிய காளைமாடு. எனக்கு என்ன கொடுக்கப்போகிறீர்கள்? எனக்கு வேண்டியது தங்களிடம் என்ன இருக்கிறது? ஒன்றும் வேண்டாம். தங்கள் தாமரை போன்ற பாதங்களில் பக்தியையே கொடுங்கள்.

ஆதியந்தங் காட்டாத முதலாய், எம்மை
யடிமைக்கா வளர்த்தெடுத்த அன்னை போல
நீதிபெருங் குருவாகி, மனவாக் கெட்டா
நிச்சயமாய்ச் சொச்சமதாய், நிமல மாகி,
வாதமிடுஞ் சமயநெறிக் கரிய தாகி,
மௌனத்தோர் பால்வெளியாய் வயங்கா நின்ற
சோதியை, என் னுயிர்த்துணையை, நாடிக் கண்ணீர்
சொரியவிரு கரங்குவித்துத் தொழுதல் செய்வாம்.

—தாயுமானவர்



# ஸ்ரீராமகிருஷ்ணரின் அருள்வாக்கு

ஞாயிறு, மார்ச் 1, 1885

இன்று டோல்யாத்ரா (ஹோலிப் பண்டிகை) என்று சொல்லப்படும் ஸ்ரீகிருஷ்ண சைதன்யரின் பிறந்த நாளாகும்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் தமது அறையில் சிறிய கட்டிலின்மீது அமர்ந்திருந்தார். அவ்விதம் அமர்ந்த நிலையிலேயே அவர் ஆழ்ந்த சமாதியில் இருந்தார். மகிமாசரண், ராம், மனோமோகன், நவாய் சைதன்யா, ம-ஆகியோரும் மற்றும் பல பக்தர்களும் அறையில் போடப்பட்டிருந்த ஒரு பாயின்மீது அமர்ந்திருந்தார்கள். அவர்கள் அனை வரும் சமாதியில் ஆழ்ந்திருந்த ஸ்ரீராமகிருஷ்ணரைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

பக்தர்கள் குருதேவரையே பார்த்தபடி இருந்தார் கள். நீண்ட நேரத்திற்குப் பிறகு குருதேவரின் மனம் சமாதியிலிருந்து மெல்ல மெல்லப் புறஉலக நினைவுக்குத் திரும்பியது.

ஸ்ரீராமகிருஷ்ணர் மகிமாசரணிடம், ''பக்தியைப் பற்றி நீ ஏதாவது கொஞ்சம் சொல்'' என்று கூறினர்.

மகிமாசரண் நாரத பாஞ்சராத்திரம் என்ற நூலி லிருந்து பின்வரும் வரிகளைக் கூறினர் :

''இறைவனைப் பக்தியோடு வழிபட்டால் தவம் செய்ய வேண்டிய அவசியம்தான் என்ன? இறை வனைப் பக்தியோடு வழிபடாவிட்டால் தவம் செய் தால்தான் என்ன பயன் ஏற்படும்? உள்ளும் புறமும் இறைவனைப் பார்க்கக் கூடிய நிலையில் இருந்தால் தவம் செய்ய வேண்டிய அவசியம்தான் என்ன? உள்ளும் புறமும் இறைவனைப் பார்க்காவிட்டால் தவம் செய்தால்தான் என்ன பயன் ஏற்படும்? ஓ, அந்தணனே! என் குழந்தாய்! மேற்கொண்டு தவம் பழகுவதை நிறுத்திவிடு. ஞானக்கடலாக விளங்கும் சிவபெருமானை விரைவில் சென்றடைவாய். பக்தர்கள் போற்றித் துதிக்கும் தூய பக்தியை அவரிடமிருந்து பெற்றிடுவாய். அந்தப் பக்தி உலகத்துடன் உன்னைப் பிணைத்து வைக்கும் பந்தபாசங்களையெல்லாம் தகர்த்து எறிந்துவிடும்.''

மகிமாசரண் : திடீரென்று ஒரு சமயம் நாரதர் தவம் செய்து கொண்டிருந்தபோது வானத்திலிருந்து அசரீரியாக இந்தச் சுலோகங்கள்* கேட்டன.

ஸ்ரீராமகிருஷ்ணர் : ஜீவகோடிகள் (சாதாரண மக்கள்), ஈசுவர கோடிகள் (கடவுளின் தூதுவர் கள்), என்று இரண்டுவிதப் பிரிவுகள் இருக்கின்றன.

ஜீவகோடிகளின் பக்தி வைதி பக்தி என்ற சாதாரண பக்தியாகும். அதாவது எப்படிப் பூஜை செய்ய வேண்டும், எவ்வளவு ஜபம் தவம் செய்ய வேண்டும் என்பது போன்ற சாஸ்திரவிதிகளுக்குக் கட்டுப்பட்டிருப்பது வைதி பக்தியாகும். இத்தகைய பக்தி, ஞானமார்க்கத்தைப் போலவே கடவுளைப் பற்றிய ஞானத்தைப் பெறும்படி செய்கிறது; அதைத் தொடர்ந்து மனம் சமாதியில் ஆழ்ந்து விடுகிறது. இவ்விதம் சமாதியில் ஆழ்ந்த பிறகு ஜீவகோடியின் மனம் திரும்பவும் விவகார நிலைக்குத் திரும்புவதில்லை.

ஆனால் ஈசுவர கோடிகளைப் பற்றிய விஷயமே முற்றிலும் வேருனது. அவர்கள் முதலில் 'மறுத்தல்' என்ற முறையையும், பிறகு 'ஏற்றுக்கொள்ளுதல்' என்ற முறையையும் பின்பற்றுகிறார்கள். முதலில் அவர்கள் 'இது பிரம்மம் அல்ல, இது பிரம்மம் அல்ல' என்று 'நேதி' முறையில் உலகத்தை ஒதுக்கிப் புறக்கணிக்கிறார்கள். அதன்பிறகு அவர்கள் முதலில் தாங்கள் புறக்கணித்த உலகமும்

* நாரதபாஞ்சராத்திர சுலோகங்கள் உரைநடையில் இங்கே தரப்பட்டிருக்கின்றன.

பிரம்மம்தான் என்று 'இதி' முறையில் உலகத்தை ஏற்றுக்கொள்கிறார்கள். ஈசுவர கோடிகளின் இந்த நிலையை ஓர் உதாரணத்தின் மூலம் சொல்லலாம்:

ஒருவன் வீட்டின் மேல்மாடியை அடைய விரும்புகிறான் என்று வைத்துக்கொள்வோம். அவன் 'இது மாடி அல்ல, இது மாடி அல்ல' என்று சொல்லி முதலில் படிக்கட்டுகளைப் புறக்கணிக் கிறான். பின்னர் மாடியின் மேல்தளத்தை அடைந்த பின்பு மேல்தளம், படிக்கட்டுகள் ஆகியவை எல்லாமே செங்கல், சுண்ணாம்பு, காரை போன்ற ஒரே விதமான பொருள்களைக் கொண்டே கட்டப் பட்டிருப்பதைத் தெரிந்து கொள்கிறான். பிறகு அவன் தன் விருப்பப்படி சில சமயங்களில் மேல் தளத்தில் தங்குகிறான்; மற்றும் சில சமயங்களில் படிக்கட்டுகளில் கீழே இறங்கி வருவதும் மேலே ஏறிச் செல்வதுமாக இருக்கிறான்.

சுகதேவர் நிர்விகல்ப சமாதியில், ஜடசமாதியில் ஆழ்ந்திருந்தார். அவர் பரீட்சித்திற்குப் பாகவதம் உபதேசிக்க வேண்டியிருந்தது. அது காரணமாகப் பகவான் நாரதரைச் சுகதேவரிடம் அனுப்பி வைத்தார். சுகதேவர் வெளியுலகம் பற்றிய நினைவு அறவே இல்லாமல் ஒரு ஜடப் பொருளைப் போலவே சமாதியில் ஆழ்ந்து மூழ்கிப் போயி ருந்ததை நாரதர் கண்டார். அதன்பிறகு நாரதர் தமது வீணையை மீட்டிக்கொண்டே பகவான் ஹரியின் பெருமையை நான்கு சுலோகங்களில் பாடினார். அவர் முதல் சுலோகத்தைப் பாடிக் கொண்டிருந்தபோது அதைக் கேட்டதுமே சுக தேவருக்கு மயிர்க்கூச்சம் ஏற்பட்டது. அதை அடுத்து, சைதன்யமயமாகப் பிரகாசிக்கும் பகவா னின் உருவத்தைத் தமது இதயத்திலேயே தரிசித்த தனால் சுகதேவரின் கண்களிலிருந்து நீர் பெருகியது. இவ்விதம் ஜடசமாதிக்குப் பிறகுங்கூடச் சுகதேவர் பகவானின் தரிசனத்தைப் பெற்றார். அவர் ஓர் ஈசுவரகோடி ஆவார்.

ஸ்ரீ ஆஞ்சனேயர் பகவானை உருவம் உள்ளவராக வும் உருவமற்ற அருவமாகவும் இரண்டு நிலை களிலும் தரிசித்தார். அதன்பிறகு அவர் ஸ்ரீராம பிரானின் திருவுருவத்திலேயே நிலையாகத் தங்கினார். பேரின்பமும் சைதன்யமும் ஒன்றுதிரண்டு வடிவெடுத் திருந்த திருவுருவம்தான் ஸ்ரீராமபிரானின் திருவுருவ மாகும்.

பிரகலாதன் சில சமயங்களில் 'நானே அது' என்ற அத்வைத நிலையில் இருந்தார். மற்றும் சில சமயங்களில் தாம் பகவானின் அடிமை என்ற மனோபாவத்திலும் அவர் தங்கியிருந்தார். பிரகலா தனைப் போன்ற ஒருவரால் கடவுள்பக்தி என்ற ஊன்றுகோல் இல்லாமல் இந்த உலகில் எப்படி வாழ முடியும்? ஆகவேதான் அவர் 'கடவுள்—ஆண்டான், நான்—அவரது அடிமை' என்ற ஆண்டான்-அடிமை மனநிலையுடன் உலகில் வாழ வேண்டும். 'நீ ஆண்டான்—நான் அடிமை' என்ற மனநிலை ஹரிரஸமாகிய பக்தியை அனுபவிக்கத் தேவைப்படுகிறது. இதில் ஒருவன், பகவானை ரஸமாகவும் தன்னை அந்த ரஸத்தை அனுபவிப் பவனாகவும் உணர்கிறான்.

பக்தியின் அகங்காரம், ஞானத்தின் அகங்காரம், குழந்தையின் அகங்காரம் முதலியவற்றில் கெடுதல் ஒன்றுமில்லை. சங்கராசாரியார் ஞானத்தின் அகங் காரமாகிய 'வித்யா நான்' என்பதை மக்களுக்குப் போதிப்பதற்காகத் தம்மிடம் வைத்திருந்தார். குழந்தையின் அகங்காரத்திற்குப் பற்றுதல் எதுவும் கிடையாது. குழந்தை முக்குணங்களையும் கடந்த தாக இருக்கிறது; அது முக்குணங்களுள் எந்த ஒரு குணத்தின் வசத்திலும் இல்லை. இப்போது ஒரு கணம் குழந்தை கோபித்துக் கொள்ளும்; மறு விநாடியே அதன் கோபம் இருந்த இடம் தெரியா மல் பறந்து போய்விடும். ஒரு கணம் அது விளையாடுவதற்காக வீடு கட்டும்; மறு விநாடியே தான் கட்டிய அந்த வீட்டைப் பற்றிய எண்ணமே அதற்கு இருக்காது. இதுபோலவே, இப்போது அது தன்னுடன் விளையாடும் நண்பர்களை மிகவும் அன்புடன் நேசிக்கிறது. சில நாட்களுக்கு அந்த நண்பர்களைப் பார்க்காமல் இருந்தால் அவர் களைப் பற்றிய எண்ணம் முழுவதும் அதற்கு மறந்து விடுகிறது. சத்துவம், ரஜஸ், தமஸ் என்ற முக் குணங்களில் எந்த ஒரு குணத்தின் ஆதிக்கத் திலும் குழந்தை இல்லை.

'ஓ பகவானே, தாங்கள் என் தெய்வம்; நான் தங்களுடைய பக்தன்' என்ற மனநிலையைப் பக்தன் கொண்டிருக்கிறான். இதில் உள்ள 'நான்' என்பது 'பக்தியின் அகங்காரம்' ஆகும். இவ்விதம் ஒரு பக்தன் பக்தியின் அகங்காரத்தை எதற்காக வைத்திருக்க வேண்டும்? அவ்விதம் அவன் பக்தி யின் அகங்காரத்தை வைத்திருப்பதற்கு ஒரு காரணம் இருக்கிறது. 'நான்' என்ற எண்ணத் திலிருந்து எளிதில் விடுபட முடியாது. ஆகவே 'நான்' என்ற இந்தப் போக்கிரிப் பயல் 'நான் கடவுளின் அடிமை, நான் கடவுளின் பக்தன்' என்று இருந்து விட்டுப் போகட்டும்.

நீ ஆயிரம் முறை ஆராய்ச்சி (விசாரம்) செய்யலாம்; என்றாலும் இந்த 'நான்' என்ற எண்ணம் மறையாமல் இருக்கும். 'நான்' என்பது ஒரு குடத்தைப் போன்றது. பிரம்மம் என்பது விரிந்து பரந்து எங்கே பார்த்தாலும் தண்ணீராக இருக்கும் கடலைப் போன்றது குடத்தைக் கடலுக்குள் மூழ்கும்படி செய்துவிட்டால், அந்தக் குடத்தின் உள்ளும் புறமும் தண்ணீர்தான் இருக்கும். அவ்விதம் உள்ளும் புறமும் தண்ணீர் இருந்தாலும் குடம் என்பதும் இருக்கவே செய்கிறது. இந்தக் குடத்தைப் போலவே பக்தனுடைய 'நான்' என்பது இருக்கிறது. குடம் இருக்கும் வரையில் 'நான், நீ' ஆகியவையும் இருக்கின்றன எவ்வளவு காலத்திற்கு 'நான், நீ' என்ற உணர்வு இருக்கிறதோ, அவ்வளவு காலத்திற்கு 'ஓ பகவானே, தாங்கள் என் தெய்வம், நான் தங்களுடைய பக்தன்; தாங்கள் என் ஆண்டான்; நான் தங்களுடைய அடிமை' என்ற உணர்வும் இருக்கும். ஆயிரம் தடவை விசாரம் செய்தாலும் இந்த 'நான்' என்ற எண்ணத்திலிருந்து உன்னால் விடுபட முடியாது. ஆனால் ஒருவேளை குடம் என்பதே இல்லாமற் போய் விடுமானால், அப்போது விஷயமே முற்றிலும் வேறானது.

நரேந்திரர் அறைக்குள் நுழைந்து ஸ்ரீராமகிருஷ்ணரை வணங்கிவிட்டு அமர்ந்தார். குருதேவர் நரேந்திரருடன் உரையாட ஆரம்பித்தார். பேசிக்கொண்டே ஸ்ரீராமகிருஷ்ணர் கட்டிலிலிருந்து எழுந்து தரையில் விரித்திருந்த பாயின்மீது வந்து அமர்ந்தார். இதற்குள்ளாக அறை முழுவதும் பக்தர்களும் மற்றவர்களும் நிரம்பி விட்டார்கள். *

---

# ஸ்ரீஆதிசங்கரர் அருளிய உபதேசங்கள்

**1.** ஏ மூடனே! ஐசுவரியத்தின் மீது நீ கொண்டுள்ள ஆசையை விட்டுவிடு. உன் உள்ளத்தில் பாரபட்ச மற்றுச் சீர்தூக்கிப் பார்க்கும் எண்ணத்தை வளர்த்துக் கொள். உன் சொந்த முயற்சியினால் சம்பாதிக்கும் சிறிதளவு செல்வமாயினும் அதைக் கொண்டு மனத்திருப்தி பெறு.

2. எல்லாத் தீங்குகளுக்கும் மூலகாரணம் செல்வமே என்பதை உணர்ந்துகொள். உண்மையில் செல்வத்தினால் சிறிதளவுகூட மகிழ்ச்சி இல்லை. எந்த நாடாயினும், எந்த இடமாயினும் செல்வர்களுக்கு அவர்களுடைய மக்களாலேயே பயமுண்டு என்பது எல்லா இடங்களிலும் வழக்கமாக இருந்துவரும் நிலையாகும்.

3. உன் மனைவி யார்? உன்மகன் யார்? இந்த வையம் மிகவும் அதிசயமானது. நீ யார்? நீ யாருடையவன்? நீ எப்பொழுது இங்கு வந்தாய்? சகோதரனே! இவை பற்றியெல்லாம் சிந்தித்துப் பார்.

4. நீ உன் மனிதர்களைப் பற்றியோ, செல்வம் பற்றியோ, இளமைபற்றியோ தற்பெருமை கொள்ளாதே. எல்லாவற்றையுமே விழுங்கிக்கொண்டிருக்கும் காலம் இவற்றை ஒரு நொடிப்பொழுதில் எடுத்துக்கொண்டுவிடும். உண்மையற்ற இவற்றைத் துச்சமெனத் தள்ளி, பிரம்மத்தை உணர்ந்து கொண்டு அதனில் நீ ஐக்கியமாகிவிடு.

5. காமம், குரோதம், மோகம், லோபம் முதலிய வற்றைத் துச்சமென உதறித் தள்ளிவிட்டு ஆத்மாவைப்பற்றிச் சிந்தனை செய். உன் உண்மை நிலையைக் கண்டுகொள்ள முயற்சி செய். ஆத்மாவைப்பற்றித் தெளியாத அறிவிலிகள் பயங்கரமான நரகத்திற்குச் செல்வார்கள்.

6. ஒருவர் ஆலயத்திலும் மரத்தின் கீழும் வாழ்வதனாலும், பூமியில் உறங்குவதனாலும், மான் தோலை அணிவதனாலும், எல்லா வெகுமதிகளையும் வெறுப்பதனாலும், மகிழ்ச்சியுறும் எல்லா செய்கைகளையும் உதறித் தள்ளுவதனாலும், அவருடைய செய்கை அனைத்துமே அவருக்கு மகிழ்ச்சியைக் கொடுக்காதா?

7. நண்பனுடனோ விரோதியுடனோ, மகனுடனோ, உறவினர்களுடனோ, யுத்த காலத்திலோ, அமைதிக் காலத்திலோ நீ பற்றுக் கொள்ளாதே. வெகு விரைவில் திருமாலின் பாதகமலங்களை அடைய வேண்டுமென நீ விரும்பினால் சமநிலையுடையவனாக இரு.

8. எல்லாவற்றையும் பொறுத்துக்கொள்ளும் விஷ்ணு உன்னுள்ளும் என்னிடத்தும் மற்றவர்களிடமும் உறைகிறார். எனவே ஒன்றுமில்லாததற்கு நீ ஏன் பொறுமையிழந்து என்னிடம் கோபம் கொள்கிறாய்? எல்லாவற்றிலும் அதே ஆன்மாவைக் கண்டுகொள்ள நீ முயற்சி செய். எல்லா இடங்களிலும் இனம் கண்டுகொள்ளும் எண்ணங்களை நீ உதறித் தள்ளிவிடு.

9. ஆர்வத்துடன் பிராணயாமத்தைப் பயிற்சி செய்வதற்கும், மனத்தைக் கட்டுப்படுத்துவதற்கும் உன்னை நீ தயார் செய்துகொள். உண்மையற்றதிலிருந்து உண்மையை உணர்ந்துகொள்வதற்கும், ஜபத்தை நிஷ்டையுடன் பயிலுவதற்கும் அதிகக் கவனம் செலுத்து.




# தமிழ்நாடு ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த பக்தர்கள் மாநாடு

இந்த ஆண்டு ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் ஜனவரி இதழில் அறிவித்திருந்தபடி 'தமிழ்நாடு ஸ்ரீ ராம கிருஷ்ண – விவேகானந்த பக்தர்கள் மாநாடு' சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் 8—3—1980 ஆம் நாள் சனிக்கிழமை மிகவும் சிறப்பாக நடந் தேறியது.

மாநாட்டில் கலந்துகொள்ளும் வாய்ப்பைப் பெருதவர்களாகவும், மாநாடு சம்பந்தமாக அறிந்து கொள்ள விரும்புபவர்களாகவும், விஜயத்தின் வாச கர்கள் பலர் இருப்பது இயல்பு. எனவே மாநாடு பற்றிய சில தகவல்கள் இந்த இதழில் விஜயதீபமாக இடம் பெறுகின்றன.

⁂ ⁂ ⁂

மாநாடு துவங்குவதற்கு முதல் நாள் மாலையே சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் மாநாட்டிற்கான விழாக்கோலம் பூண்டுவிட்டது.

மாநாட்டில் கலந்துகொள்ளும் பொருட்டு பல ஊர்களிலிருந்தும் அன்பர்கள் வெள்ளிக்கிழமை மாலையிலேயே மடத்திற்கு வர ஆரம்பித்தனர். சென்னை மடத்திலும், மடத்திற்கு அருகிலுள்ள முருக விலாஸ் கல்யாண மண்டபத்திலும் வெளியூர் களிலிருந்து வரும் பக்தர்கள் தங்குவதற்கு வேண் டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. வெள்ளிக் கிழமை மாலையே வந்த பக்தர்கள் அந்த இரண்டு இடங்களிலும் தங்கினர்.

மாநாடு நடைபெற்ற மார்ச் 8-ஆம் நாள் காலை ஆறு மணி முதற்கொண்டே பக்தர்கள் மடத்தில் திரள் திரளாகக் குழும ஆரம்பித்தனர். மடத்தின் நுழைவாயிலிலும், மாநாடு நடைபெற்ற இடத்திலும், "ஸ்ரீ ராமகிருஷ்ணரின் குழந்தைகளே வருக! வருக! வருக!", "தமிழக ஸ்ரீ ராமகிருஷ்ண - விவேகா னந்த பக்தர்கள் மாநாடு" என்று தமிழிலும் ஆங்கி லத்திலுமாகத் துணியில் எழுதிக் கட்டப்பட்டிருந்த வாசகங்களும், அலங்காரத் தோரணங்களும் 'மாநாடு சிறப்பாக நடைபெற இருக்கிறது' என்பதை முன்னதாகவே அறிவிப்பது போன்று இருந்தன.

**காலை நிகழ்ச்சிகள்**

காலை 8-30 முதல் 9 மணி வரை பக்திப் பாடல் கள், பிரார்த்தனை ஆகியவற்றைத் தொடர்ந்து விவேகானந்த ஹாலில் மாநாடு துவங்கியது. மேடையில் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் திரு வுருவப் படம் அலங்கரிக்கப்பட்டிருந்தது.

தமிழகத்தின் பல பாகங்களிலிருந்தும் வந்திருந்த அன்பர்களையெல்லாம், ஒரு தாய் நீண்ட காலத் திற்குப் பிறகு தன் குழந்தைகளைக் காணும் மட் டற்ற உவகையுடன், ஸ்ரீ ராமகிருஷ்ணர், ஸ்ரீ அன் னையார், ஸ்ரீ விவேகானந்தர் ஆகியோரின் பெய ராலும், ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கத்தின் சார்பாகவும் சுவாமி தன்மயானந்தர் வரவேற்று வரவேற்பு கூறி னார்.

அடுத்து, சுவாமி தபஸ்யானந்தர் தமது தலைமை உரையை நிகழ்த்தினார். அவரது ஆங்கில உரையை பேராசிரியர் ஏ. சுப்பிரமணியம் உடனுக் குடன் அப்போதைக்கப்போதே தமிழில் மொழி பெயர்த்துக் கூறினார்.

சுவாமி தபஸ்யானந்தர், இராமகிருஷ்ண - விவே கானந்த இயக்கம் தமிழகத்தில் தோன்றியது முதற் கொண்டு இன்றுவரையிலான வளர்ச்சிகளைச் சுருக்க மாகக் கூறி, "இங்கு இதே இடத்தில் நமது மடத் தின் சார்பாக எத்தனையோ மத சம்பந்தமான நிகழ்ச்சிகளையும் பொதுக்கூட்டங்களையும் நடத்தி யுள்ளோம். அவற்றில் சென்னையைச் சேர்ந்த மக்கள்தாம் கலந்துகொள்வார்கள்; வெளியூர்களி லிருந்து வெகு சிலர்தாம் இதுவரையில் இந்த ஹாலில் நடைபெற்றக் கூட்டங்களில் கலந்து

கொண்டிருக்கிறார்கள். முதல் முறையாகப் பல ஊர்களிலிருந்தும் வந்துள்ள அன்பர்கள் கலந்து கொண்ட அபூர்வமான பெரிய கூட்டம் இது" என்று குறிப்பிட்டார்.

அடுத்து, கோவை ஸ்ரீ ராமகிருஷ்ண வித்யாலத்தின் செயலாளர் தி. சு. அவினாசிலிங்கம் அவர்கள் விழாவைத் துவக்கி வைத்தார். அவர் 'ஸ்ரீ ராமகிருஷ்ண மடமும் சங்கமும்' என்ற தலைப்பில் சுவாமி தபஸ்யானந்தர் ஆங்கிலத்தில் எழுதிய நூலின் தமிழாக்கத்தை வெளியிட்டார்.

திரு அவினாசிலிங்கம் அவர்கள், "புத்தம் சரணம் கச்சாமி, தர்மம் சரணம் கச்சாமி, சங்கம் சரணம் கச்சாமி" என்ற மூன்று வாசகங்களையும் ஸ்ரீ ராமகிருஷ்ணர், ஸ்ரீ ராமகிருஷ்ண தர்மம், ஸ்ரீராமகிருஷ்ண சங்கம் ஆகியவற்றுடன் ஒப்பிட்டு விளக்கமாகப் பேசினார்.

சுவாமி சர்வக்ஞானந்தர் 'தமிழகத்தைச் சேர்ந்த கிராமங்களின் முன்னேற்றத்திற்கு மேற்கொள்ளப் பட வேண்டிய பணிகள்' என்பது பற்றியும், சுவாமி சம்பிரக்ஞானந்தர் 'கிராமப் பகுதிகளில் தேவைப் படும் மருத்துவப்பணிகள்' என்பதுபற்றியும், சுவாமி ராகவேசானந்தர் 'தமிழ் நாட்டின் இப்போதைய தேவைகள்' என்பது பற்றியும், சுவாமி கீர்த்திதானந்தர், 'தொண்டு மனப்பான்மை' என்ற தலைப்பிலும் உரை நிகழ்த்தினார்கள்.

மதுரையைச் சேர்ந்த டாக்டர் சண்முகம் அவர்களும், ஆர்க்காட்டைச் சேர்ந்த டாக்டர் கார்த்திகேயன் அவர்களும் முறையே மதுரை, ஆர்க்காடு ஆகிய பகுதிகளில் நடைபெற்றுவரும் ஸ்ரீ ராமகிருஷ்ண—விவேகானந்த இயக்கத்தின் பணிகளைக் குறித்து உரையாற்றினர்.

பகல் 11-15 மணி முதல் 12-30 மணிவரை விவேகானந்த ஹாலில் பலவேறு பஜனைக் குழுக்களைச் சேர்ந்தவர்கள் பக்திப்பாடல்களைப் பாடினர். விவேகானந்த ஹாலில் பக்திப் பாடல்கள் நடந்து கொண்டிருந்தபோது மடத்தின் நூலகத்தில் மாநாட்டின் செயற்குழு கூடியது.

## செயற்குழு கூட்டம்

பகல் 11-15 மணி முதல் 12-30 வரை நடைபெற்ற செயற்குழு கூட்டம் பல கருத்துக்களையும் தீர்மானங்களையும் குறித்து ஆராய்ந்தது.

இராமகிருஷ்ண மடங்களைச்சேர்ந்த துறவிகள், தி. சு. அவினாசிலிங்கம், மற்றும் ஸ்ரீ ராமகிருஷ்ணர், ஸ்ரீ சாரதாதேவியார், ஸ்ரீ விவேகானந்தர் ஆகியோரின் பெயரால் தமிழகத்தில் இயங்கிவரும் 40 அமைப்புகளின் பிரதிநிதிகள் ஆகியோரைக் கொண்ட செயற்குழு கூட்டத்தில் சுமார் 75 பேர் கலந்து கொண்டனர்.

சங்கம், சமிதி, மன்றம் என்ற பெயர்களில் தமிழக முழுவதிலும் ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த அன்பர்கள் சிறு சிறு அமைப்புகளாகப் பலவற்றை நடத்தி வருகிறார்கள். இவ்விதம் இராமகிருஷ்ண-விவேகானந்த இயக்கத்தில் பங்கு கொண்டுள்ள நிறுவனங்கள் செயல்படுவதற்குச் சாதகமாகவும் பாதகமாகவும் இருந்துவரும் சூழ்நிலைகளைப்பற்றியெல்லாம் செயற்குழு விவாதித்தது.

செயற்குழு கூடியபோதுதான் எத்தனை எத்தனை ஊர்களில் ஸ்ரீ ராமகிருஷ்ணர், ஸ்ரீ அன்னையார், ஸ்ரீ விவேகானந்தர் ஆகியோரின் பெயரால் அமைப்புகள் தமிழகத்தில் இயங்கி வருகின்றன என்ற விவரமே பலருக்கும் தெரிய வந்தது. இவ்வளவு பேர்கள் இராமகிருஷ்ண-விவேகானந்த இயக்கத்தில் பங்கு கொண்டுள்ளனர் என்ற விவரம் தெரிய வந்தபோது அதுவே பெரிதும் வியப்பூட்டுவதாக இருந்தது.

செயற்குழுவில் கலந்துகொண்ட அன்பர்கள் ஒவ்வொருவரும் தாங்கள் ஸ்ரீ ராமகிருஷ்ணர், ஸ்ரீ அன்னையார், ஸ்ரீ விவேகானந்தர் ஆகியோர் பெயரால் நடத்திவரும் அமைப்பின் பெயரைச் சொல்லி, அந்தந்த அமைப்புகள் நடத்திவரும் பணிகளைப் பற்றிச் சுருக்கமாகத் தெரிவித்தனர். அதைத் தொடர்ந்து செயற்குழு அங்கத்தினர்கள் பல கருத்துக்களை ஆராய்ந்து முடிவில் சில தீர்மானங்களை நிறைவேற்றினர்.

இதுபோன்ற மாநாட்டை ஆண்டுக்கு ஒருமுறை கூட்டவேண்டும் என்று செயற்குழு அவையில் கலந்துகொண்ட அனைவருமே வற்புறுத்திப் பேசினர். அந்தக் கருத்து ஏற்றுக் கொள்ளப்பட்டவுடன், எந்த ஊரில் அடுத்த மாநாட்டை வைத்துக் கொள்ளலாம் என்ற பேச்சு எழுந்தது. அதைத் தொடர்ந்து பலரும் தங்கள் தங்கள் ஊர்களின் பெயர்களைக் கூறி 'எங்கள் ஊரில் மாநாட்டை வைத்துக்கொள்ளுங்கள்; எங்கள் ஊருக்கு அனைவரும் வாருங்கள்; நாங்கள் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்கிறோம்' என்று ஆவலுடன் கூறினர். அவர்களின் அன்பார்ந்த அழைப்பையும் உற்சாகத்தையும் கண்டு எவரும் வியப்படையாமல் இருக்க முடியாது. அவ்விதம் அவர்கள் பேசியது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

முடிவில் அடுத்த ஆண்டு 'தமிழ் நாடு ஸ்ரீ ராமகிருஷ்ண - விவேகானந்த பக்தர்கள் இரண்டாம்

மாநாடு' கோயம்புத்தூரில் வைத்துக்கொள்வது என்று முடிவு செய்யப்பட்டது.

## பக்தர்கள் பேரவை

**மா**லை மூன்று மணிக்கு மாலை நிகழ்ச்சிகள் துவங்கின. சுவாமி கபீரானந்தர் 'ஸ்ரீராமகிருஷ்ணர்' என்ற தலைப்பிலும், சுவாமி கமலாத்மானந்தர் 'இராமகிருஷ்ண—விவேகானந்த இயக்கத்திற்கு நமது பங்கு' என்ற தலைப்பிலும் உரை நிகழ்த்தினர்.

மாலை 3-30 மணிக்கு சுவாமி தபஸ்யானந்தரின் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தி. சு. அவினாசிலிங்கம் அவர்கள் செயற்குழுவில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களை பக்தர்களுக்கு விளக்கிப் பேசினார். சுவாமி தன்மயானந்தர், "தமிழகத்தின் பலபாகங்களிலிருந்தும் மாநாட்டிற்கு வந்துள்ள அன்பர்கள் பலரும், ஆண்டுக்கு ஒருமுறை வெளியூர் அன்பர்கள் இதுபோன்று பெரிய அளவில் கலந்து கொள்ளத்தக்க மூன்று நாள் அல்லது இரண்டு நாள் அந்தர்யோகத்திற்கு ஏற்பாடு செய்யும்படி சென்னை மடத்தைக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். அடுத்த ஆண்டு அவ்விதமே ஏற்பாடு செய்வதாக இருக்கிறோம்" என்று கூறினார்.

அடுத்து, சுவாமி சோமானந்தர் 'தென்னிந்தியாவில் இராமகிருஷ்ண இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும்' என்ற தலைப்பிலும், சுவாமி அவ்யயானந்தர், 'இராமகிருஷ்ண இயக்கத்தின் ஆன்மிகப் பணிகள்' என்ற தலைப்பிலும், சுவாமி யதிராஜானந்தர் 'ஸ்ரீராமகிருஷ்ணரின் தனிச் சிறப்புக்கள்' என்ற தலைப்பிலும், பேராசிரியர் ஏ. சுப்பிரமண்யம் 'இந்த மாநாடு கூட்டப்பட்டதன் நோக்கம்' என்ற தலைப்பிலும் உரையாற்றினர்.

சுவாமி மதுரானந்தர், ஆ. திலகமணி, துரைராஜ் ஆகியோர் முறையே வெள்ளிமலை, சிவகாசி, செங்கம் பகுதிகளில் நடைபெற்று வரும் ஸ்ரீராமகிருஷ்ண இயக்கத்தின் பணிகளைக் குறித்துப் பேசினர்.

மாலை 5 மணிக்குப் பக்தர்கள் பேரவை முடிவு பெற்றது. சிற்றுண்டிக்குப் பிறகு அன்பர்கள் மீண்டும் விவேகானந்த ஹாலில் கூடினர்.

மாலை 6-30 முதல் இரவு 8 மணி வரையிலும் திருமுருக கிருபானந்த வாரியார் 'ஸ்ரீராமகிருஷ்ணர்' என்ற தலைப்பில் இன்னிசைச் சொற்பொழிவு நிகழ்த்தினார். அடுத்து மாநாட்டில் கலந்துகொண்ட அனைவருக்கும் சுவாமி கமலாத்மானந்தர் தெரிவித்த நன்றியுரையுடன் மாநாடு நிறைவு பெற்றது.

## முடிவுரை

'தனக்கு இருக்கும் பலம் ஆஞ்சனேயருக்குத் தெரியாமலே இருந்தது. ஜாம்பவான் எடுத்துச் சொன்ன பிறகுதான் தன்னைப்பற்றியே ஆஞ்சனேயர் தெரிந்து கொண்டார்' என்று ஓர் இதிகாசக் கதை சொல்வார்கள். அதுபோன்று ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த அன்பர்கள் தமிழகம் முழுவதிலுமே இருக்கிறோம். ஆனால் நமக்குள்ள பலத்தை இது வரையில் நாமே அறியாமல் இருந்தோம். அவ்விதம் தெரிந்து கொள்வதற்கு உரிய வாய்ப்பு இது வரை நேராமலே இருந்தது. இப்போது நடைபெற்ற மாநாடு நமது வலிமையை நாமே உணர்ந்து கொள்வதற்கு அரிய ஒரு வாய்ப்பாக அமைந்தது.

இப்போது நடைபெற்ற மாநாடுதான், தமிழகத்தில் உள்ள ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த அன்பர்கள் பலரும் ஒன்றுகூடும் வாய்ப்பை முதல் முறையாக ஏற்படுத்தியது. இனி வரும் ஆண்டுகளில் இப்போதைவிடவும் பல மடங்கு மாநாடுகள் சிறப்பாக அமையும் என்பதில் ஒரு சிறிதும் சந்தேகமில்லை.

சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் தலைவர், "இவ்வளவு பேர் இத்தனை ஆர்வத்துடன் இராமகிருஷ்ண-விவேகானந்த இயக்கத்தில் ஈடுபாடு கொண்டிருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியவே தெரியாதே!" என்று குறிப்பிட்டார். அவர் தெரிவித்த அதே கருத்தைத்தான் பலரும் கொண்டிருக்கிறார்கள்.

அதிகபட்சம் 500 பேர் இந்த மாநாட்டில் கலந்து கொள்ளக்கூடும் என்று எதிர்பார்த்து சென்னை மடம் மாநாட்டிற்கு ஏற்பாடு செய்திருந்தது. எனினும் சுமார் 800 பேர் பல நகரங்களிலிருந்தும் கிராமங்களிலிருந்தும் மாநாட்டில் கலந்து கொண்டார்கள். தேவையான முயற்சிகளைக் கூடுதலாக மேற்கொண்டால் இது போன்று பல மடங்கு சிறப்பாக இனி வரும் மாநாடுகளை நடத்த இயலும் என்பது நிச்சயம்.

இப்போது நடந்து முடிந்த மாநாடு எதிர்பார்த்ததை விட சிறப்பாக நடந்தேறியுள்ளது. இம் மாநாடு கூடுவதற்குக் காரணமாக இருந்தவர்களுக்கும், அதில் கலந்து கொண்டவர்களுக்கும் விஜயம் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

ஜய் ஸ்ரீ குருமகராஜிக்கு ஜய்!
ஜய் ஸ்ரீ மகமாயிக்கு ஜய்!
ஜய் ஸ்ரீ சுவாமிஜி மகராஜிக்கு ஜய்!
ஹரி: ஓம் தத் ஸத்!

☆

# சிவ சிந்தனைகள்

பிரம்மசாரி முத்துக்குமார்

### சோமஸ்கந்தர்

சிவபெருமானுக்கும் உமாதேவியாருக்கும் இடையில் முருகன் இருக்கும் திருக்கோலம் சோமஸ்கந்தர் எனப்படும்.

சிவாலயங்களில் நடராஜப் பெருமானுக்கு அடுத்தபடியாக வழிபாட்டில் சோமஸ்கந்தருக்கு முக்கியத்துவம் தரப்படுகிறது. சதாசிவ மூர்த்தியின் ஐந்து முகங்களுள் தத்புருஷம் என்னும் கிழக்கு நோக்கிய மூர்த்தியே சோமஸ்கந்தராக உயிர்களுக்குப் போகத்தை வழங்குகிறுர் என்று சைவ சமயம் கூறுகிறது.

இறைவனுக்கே உரிய தனிச் சிறப்பியல்புகளாகச் சொல்லப்படும் சத்-சித்-ஆனந்தம் என்பவற்றுள் சிவம் சத்தாகவும், அம்பிகை சித்தாகவும், குமரன் ஆனந்தமாகவும் திகழும் தன்மையைச் சோமஸ்கந்த மூர்த்தம் விளக்குகிறது.

### பிட்சாடனர்

தாருகாவனத்தில் இருந்த முனிவர்களின் செருக்கை அகற்றுவதற்குச் சிவபிரான் எடுத்தருளிய வடிவம் பிட்சாடனர் வடிவம். இந்தத் திருவுருவம் சிவன் கோவிலின் திருவிழாவில் ஒரு நாள் திருச்சுற்றுலா வருவதுண்டு. பிட்சாடன மூர்த்தி உயிர்களின் அகங்கார மமகாரங்களைப் பிச்சையாகப் ஏற்றுக்கொண்டு அவற்றுக்குப் பணிவையும் அருளையும் வழங்குகிறுர் என்று சிவாகமங்கள் கூறுகின்றன.

வேள்வியே மேலான பதவியைத் தருவதற்குப் போதுமானது என்று தாருகாவனத்து முனிவர்கள் தவருக நினைத்தார்கள். அவர்கள் வேள்விகளின் மூலம் பெறும் அதி அற்புதச் சக்திகளைப் பெற்றவர்களாகவும், மெய்ஞ்ஞானம் அறவே மறைக்கப் பெற்ற நிலையில் அகங்காரம் கொண்டவர்களாகவும் இருந்தார்கள். சுவர்க்க போகங்களை விரும்பி முக்தியாகிய பேரின்பத்தை மறந்தார்கள். பரம்பொருளை மறுத்து, அதனிடமிருந்து விலகிச் சென்ற அவர்களைக் கருணை கூர்ந்து காப்பாற்றப் பிறப்பறுக்கும் பெம்மான் தனது உன்னத நிலையிலிருந்து பிட்சாடனுகக் கீழ் இறங்குகிறுன். எல்லா உலகங்களுக்கும் தலைவன், குபேரனுக்கும் மேலான செல்வன், ஓர் எளியவன் போன்று பிட்சாடனுகத் தோன்றுகிறுன். வேண்டுவார் வேண்டுவன எல்லாம் அளிக்கும் வள்ளல் எதுவுமே இல்லாத ஏழையாக, எளியவனுக, கபாலம் ஏந்தியவனுக வருகிறுன். சிவபிரான் முனிவர்களிடம் அவர்களின் அன்பையும் ஆணவத்தையுமே பிச்சையாகக் கேட்டார். 'எம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச் செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனே' என்பது மணிவாசகரின் திருவாக்காகும். தம்மை மறந்தும் மறுத்தும் இருள்வழிச் செல்லும் உயிர்களைத் தன்னுடையவர்களாக்கி அருள்வழியில் நடத்தவே இறைவன் நம்மிடம் அன்புப் பிச்சைக் கேட்டு வருகிறுன் என்ற இனிய தத்துவம் பிட்சாடனர் புராணக் கதையில் இடம் பெற்றிருக்கிறது.

### காலகாலர் காமதகனர்

காலமும் காமமுமே மக்களை முடிவில்லாத பிறப்பு இறப்பு என்ற சக்கரத்திற்குள் சுழலவைத்துக் கொண்டிருக்கின்றன. சிவபிரான் காலனைக் காலால் உதைத்தார் என்பதும் காமனை எரித்தார் என்பதும் புராண வரலாறுகளாகும். காமத்தையும் காலனையும் அழித்த பெருமானிடம் மக்கள் தங்கள் இதயத்தை அர்ப்பணிப்பதன் மூலம்தான் பிறப்பிறப்பாகிய சம்சாரத்திலிருந்து விடுபட்டு அழியாத அமர வாழ்க்கை பெற முடியும் என்பதைச் சிவபெருமானின் இந்த இரண்டு திருவிளையாடல்கள் விளக்குகின்றன.

### சங்கர நாராயணர்

வலப் புறத்தில் செந்நிற உடலுடன் மழுப்படையும் அபயகரமும் தாங்கிச் சிவபெருமானும், இடப் புறத்தில் நீலநிற மேனியுடன் சக்கரப் படையுடன் வரதமும் ஏந்திய திருமாலும் ஓர் உடலுடன் விளங்குவதே சங்கர நாராயணத் திருவுருவம் எனப்படுகிறது. இதனைத் திருமங்கையாழ்வார் ''பிறைதங்கு சடையானை வலத்தே வைத்து'' என்று குறிப்பிட்டுள்ளார். ஒரே பரம்பொருள் பல தெய்வ வடிவங்களாக விளங்குகிறது என்ற உண்மையை உணர்த்தவே இறைவன் சங்கர நாராயணனுகத் தோன்றினுன்.

### சிவ சின்னங்கள்

இந்த உலகமும் இந்த உலகில் நமது வாழ்க்கையும் நிலையற்றவை. முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும் முடிவில் ஒருபிடிச் சாம்பராய் வெந்து மண்ணுவதைக் கண்ட பின்னும் நாம் இந்த உலகப் பற்றை விட்டுவிடத் தயாராக இல்லையே! 'மின்னல் போன்று கணத்தில் தோன்றி மறையும் உலக வாழ்க்கையில் பற்றுவைத்து லௌகிகத்தில் மூழ்கி ஆசை வெறியில் மயங்கி ஏமாந்துவிடாதே! என்றென்றைக்கும் நித்தியமான பரம்பொருளைச் சார்ந்து வாழ்ந்து மனிதப் பிறவியைப் பயனுடையதாக்கிக் கொள்'

என்ற பேருண்மையைச் சிவனாரின் திருமேனியில் பொலியும் திருநீறு விளக்குகிறது.

இயற்கை உணர்வினன் சிவனே என்பதை, பற்றுக் கோடின்றித் தீயாகிய மழுவினைத் திருக்கையில் அவன் ஏந்தியிருப்பது விளக்குகிறது. அது போலவே இறைவனின் அளப்பரிய வல்லமைக்கும், கடவுளின் சங்கல்பத்திற்கு மாருக நடக்கும் தீய சக்திகளின் அழிவுக்கும் சின்னமாக இருப்பது திரிசூலம். ஜீவர்களைப் பந்தப்படுத்தியுள்ள ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களையும் அழித்து முக்தி என்னும் பேரின்ப வீடுபேற்றை அருளும் வள்ளல் சிவபிரான்.



மும்மை மலம் அறுவித்து முதலாய முதல்வன் தான்
நம்மையுமோர் பொருளாக்கி நாய் சிவிகை ஏற்றுவித்த
அம்மையெனக் கருளியவா ரார்பெறுவார் அச்சோவே

என்பதன் மூலம் உயிரினங்கள் மலம் நீங்கி கடைத்தேற வேண்டும் என்பதில் இறைவன் அளவற்ற கருணையும் அக்கறையும் கொண்டுள்ளான் என்பதை திருவாசகம் உணர்த்துகிறது. பயங்கரமான ஆயுதமாகத் தோன்றும் சிவனாரின் சூலாயுதம் இறைவனின் கருணையை விளக்கும் சின்னமாகவே திகழ்கிறது.

யோகிகளுக்கெல்லாம் மிகப் பெரிய யோகியாகச் சிவபிரான் விளங்குகிறார். அதை விளக்கவே அவர் குண்டலினி சக்தியின் வடிவமாக விளங்கும் நாகங்களை ஆபரணமாக அணிந்துள்ளார். 'பாம்பென்றால் படையும் நடுங்கும்' என்பர். எனவே பாம்பை எவரும் விரும்பமாட்டார்கள் என்பதற்கு விளக்கம் வேண்டியதில்லை. அனைவரும் விரும்பும் அழகும் தன்மையும் கொண்டவன் சந்திரன். அத்தகைய சந்திரனுக்குச் சிவனாரிடம் இடம் இருப்பது போன்று கொடிய நச்சுப் பாம்புக்கும் இடம் உண்டு. நல்லதை விரும்புவதும் தீயதை விலக்குவதும் சாதாரண மக்களின் இயல்பாகும். உயர்விலும் தாழ்விலும் சமதரிசனம் கொண்டிருத்தல் தெய்விகம் வாய்க்கப்பெற்ற மேலோரின் இயல்பாகும். எல்லா உயிர்களுக்கும், நன்மைக்கும் தீமைக்கும் இறைவனின் சிருஷ்டியில் இடம் உண்டு. எல்லோரிடமும் இறைவனின் கருணை சமமாகவே பாய்கிறது. எனவே அவனுக்குச் 'சங்கரன்-நன்மை செய்பவன்' என்ற திருநாமம் அமைந்திருக்கிறது. பாம்பும் சந்திரனும் இயல்பாகவே பகைவர் என்பது புராண நம்பிக்கை. கருணைக் கடலான பரம்பொருளின் திருச்சன்னிதியில் இயற்பகையையே மறந்து அவர்கள் ஒன்ருக இருக்கிருர்கள். 'நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநிறை நடுவே, நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலங்கொடுக்கும் நலமே' என்ற வள்ளலார் பாடல் இறைவன் பாம்பையும் சந்திரனையும் தம்மிடம் கொண்டிருக்கும் அரும் செயலுக்குப் பொருத்தமான விளக்கமாக அமைந்துள்ளது எனலாம்.

எல்லாத் தர்மங்களையும் வெளிப்படுத்தியவனும், வேத தர்மங்களின் உறைவிடமும், அதை உலகில் நிலைநிறுத்தியவனும் இறைவனே என்பதைத் தர்மத்தின் வடிவமாக விளங்கும் வெள்ளை எருதின்மீது இறைவன் பவனிவருவது குறிப்பிடுகிறது. 'எண்ணுவார் நெஞ்சில் நண்ணுவான் ஈசன்' என்பது சத்திய வாக்காகும். இடைவிடாத இறைசிந்தனையின் பெரும் பயனாக உள்ளம் பெருங் கோயிலாகவும், ஊனுடம்பே ஆலயமாகவும் மாறிவிடுகின்றன. இடைவிடாத தெய்வ சிந்தனை மிகமிக அவசியம் என்பதைப் பெருமானின் திருக்கரத்தில் உள்ள ஜபமாலை நினைவூட்டுகிறது. ஆணவம் அழிந்தாலன்றி ஆண்டவன் அணுகமாட்டான். 'நான்' என்னும் அகங்காரம்போய் 'எல்லாம் நீ' என்ற உயர்ஞானம் உண்டாக வேண்டும். ஆணவத்தை அழித்து ஆட்கொள்ளும் அருளாளன் இறைவன். எனவே தான் சிவபிரான் அகங்காரத்தின் உருவமான புலியின் தோலை ஆடையாக அணிந்துள்ளான்.

முப்புரங்கள் எரிந்தபின்னர் இறைவனிடம் தேவர்கள் சென்று அவற்றின் அழிவுபற்றிக் கூறினார்கள். அதைக் கேட்டதும் இறைவனின் கண்களிலிருந்து நீர்த்துளிகள் வீழ்ந்தன. அவையே உருத்திராட்சமாகத் திரண்டன என்பது புராண வரலாறு. பொதுவாக உருத்திராட்சம் இரக்கத்துக்கும் கருணைக்கும் அறிகுறியாகத் திகழ்கிறது.

தங்காளன், ஜலந்தராரி, கஜமுகானுக்கிரகர், வீரபத்திரர், கபாலமூர்த்தி ஆகிய மூர்த்திகளும் இன்னும் சிவனாரின் மற்றத் திருவுருவங்களும் இறைவன் பக்தர்களைக் காப்பாற்றி, தீயசக்திகளை அழித்தொழிக்கும் செயலையும், இறைவனின் கருணையின் வெளிப்பாட்டையும் உணர்த்தும் வகையில் அமைந்துள்ளன.

*

# செயற்குழுவின் தீர்மானங்கள்

தமிழ்நாடு ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த பக்தர்கள் மாநாடு 8-3-80ஆம் நாள் கூடியது. அதன் ஓர் அங்கமாக மடத்தின் நூலகத்தில் கூடிய செயற்குழுவில் பின்வரும் தீர்மானங்கள் நிறை வேற்றப்பட்டன.

1. தமிழ்நாடு முழுவதும் பகவான் ஸ்ரீராம கிருஷ்ணர், அன்னை ஸ்ரீசாரதா தேவியார், சுவாமி விவேகானந்தர் ஆகியோரின் தெய்விகக் கருத்துக்களைப் பரப்பி வரும் பல அமைப்புக்கள் பலவேறு பெயர்களில் இயங்கி வருகின்றன. இத்தகைய எல்லா அமைப்புக்களும் சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்துடன் நெருங்கிய தொடர்பு கொள்ளும் வகையில் ஏற்பாடு செய்தல்.

2. இவ்விதம் தொடர்பு கொள்ளும் அமைப்புக் கள் ஸ்ரீராமகிருஷ்ண மிஷனின் கிளைகள் அல்ல. ஆனால் இந்த எல்லா அமைப்புக்களும் ஸ்ரீராம கிருஷ்ணரையும் ஸ்ரீவிவேகானந்தரையும் பின்பற்றி ஒரே விதமான இலட்சியங்களுக்காகச் செயல்படும்.

3. இத்தகைய ஒவ்வொரு சங்கமும் சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் ஆலோசனையுடன் விதி முறைகளை அமைத்துக் கொள்ளும். இந்தச் சங்கங்கள், தற்போது அரசாங்கம் கொண்டு வந்தி ருக்கும் 'சங்கங்கள் பதிவுமுறை (Society Registration Act)' சட்டத்தின்படி தனித்தனியே தங்களைப் பதிவு செய்துகொள்ளும்.

4. ஒவ்வொரு சங்கம் அல்லது மன்றமும் குறைந்த பட்சம் மூன்று மாதத்திற்கு ஒருமுறை தான் ஆற்றிய, ஆற்ற வேண்டிய பணிகளைக் குறித்து ஆராய தனது செயற்குழு கூட்டத்தைக் கூட்ட வேண்டும். அது போன்ற செயற்குழு கூட்டங்களில் வாய்ப்புள்ளபோது மடத்திலிருந்து சுவாமிஜி ஒருவர் கலந்துகொள்வார்.

5. ஒவ்வொரு சங்கமும் இரண்டு மாதங்களுக்கு ஒருமுறை தான் ஆற்றிய பணிகளைக் குறித்து மடத் திற்கு அறிக்கை அனுப்பவேண்டும்.

6. மன்றங்களும் சங்கங்களும் பள்ளி, மருத்துவ மனை போன்ற பெரிய காரியங்களைத் துவக்குவதற்கு முன்னால் அத்தகைய பணிகளைச் சிறப்பாக நடத்து வதற்கு உரிய ஆலோசனைகளை மடத்திலிருந்து பெற்றுக்கொள்வார்கள்.

7. மன்றம் தனது வரவு செலவு பற்றிய ஆண்டு அறிக்கையை மடத்திற்கு அனுப்பி வைக்கும்.

8. மன்றங்கள் வசரத்திற்கு ஒருமுறையோ, வாய்ப்புள்ளபோதோ இயன்ற வரையில் அவ்வப் போது ஆன்மிகப் பிரசாரங்களில் தங்களை ஈடு படுத்திக்கொள்ள வேண்டும். மத சம்பந்தமான விழாக்கள், பஜனை, ஸ்ரீராமகிருஷ்ணர் ஸ்ரீசாரதா தேவியார் சுவாமி விவேகானந்தர் ஆகியோரின் ஜயந்தி விழாக்கள் போன்றவை மன்றங்களின் பணிகளாக அவசியம் இடம் பெறவேண்டும்.

9. ஆன்மிகக் கருத்துக்களைப் பரப்புவதற்கு மத சம்பந்தமான நூல்கள் சிறந்த கருவிகளாகத் திகழ் கின்றன. எனவே ஒவ்வொரு மன்றமும் ஆன்மிக நூல்களையும் ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த இலக் கியங்களையும் பரப்புவதற்குத் தீவிர முயற்சிகளை மேற்கொள்ளவேண்டும்.

10. மன்றம் தான் இயங்கி வரும் ஊரிலோ அல்லது அந்த ஊருக்கு அருகிலோ பெரும் திருவிழாக்கள் நடைபெறும்போது இராமகிருஷ்ண-விவேகானந்த இலக்கியங்களை விற்பனை செய்ய புத்தகக் கடை அமைத்தல்.

11. இராமகிருஷ்ண-விவேகானந்த நூல்களை விற்பனை செய்யவும், ஸ்ரீராமகிருஷ்ணர், ஸ்ரீ அன்னை யார், ஸ்ரீவிவேகானந்தர் ஆகியோரின் வாழ்க்கை வரலாறுகளைத் திரைப்படங்களாகக் காண்பிக்கவும் ஒரு வேன் வாங்குவதற்கு உரிய ஏற்பாடுகளைச் செய்தல்.

12. சென்னை மெரினா கடற்கரையில் தற்போது 'விவேகானந்தர் இல்லம்' என்று அழைக்கப்படும் இடம் சுவாமி விவேகானந்தரின் வாழ்க்கையிலும், இராமகிருஷ்ண மடத்தின் ஆரம்ப கால வரலாற் றிலும் முக்கியத்துவம் வாய்ந்த இடமாகும். எனவே விவேகானந்தர் இல்லத்தை அரசாங்கத்திடமிருந்து பெற்று அந்த இடத்தில் விவேகானந்தரின் வாழ்வை யும் வாக்கையும் விளக்கும் நிரந்தரக் கண்காட்சி நிலையம் ஏற்படுத்துவதற்கு ஒரு குழு அமைத்தல்.

13. தமிழ் பண்பாட்டுக்கு இதயமாக விளங்கும் மதுரை மாநகரில் ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் ஒரு கிளையை நிறுவும்படி இந்த மாநாடு தலைமை நிலைய மாகிய பேலூர் ஸ்ரீராமகிருஷ்ண மடத்தைக் கேட்டுக் கொள்கிறது.

*




# ராவணன் பெற்ற சாபம்

விவேகானந்ததாசன்

இறைவன் நமக்கு அறிவையும் ஆற்றல்களையும் தந்திருக்கிறார். அவற்றை இறைவனை வழிபடுவதற்கும் உலகில் மக்கள் மகிழ்ச்சியுடன் வாழ்வதற்கும் நாம் பயன் படுத்த வேண்டும். பிறர் மனம் புண்படும்படிப் பேசுவதோ செயல் புரிவதோ இறைவனுக்கு ஒவ்வாதது மட்டுமல்லாமல், அவ்விதம் செய்பவனையே அது அடியோடு அழித்துவிடும். அழிவிலிருந்து தன்னைக் காத்துக்கொள்ள வேண்டுமானால் அவன் தன்னை உணர்ந்து நொந்து தன் உடலையும் உணர்வையும் வருத்தி நோன்பிருந்தால்தான் பயன்பெற முடியும்.

விச்ரவஸ் என்ற முனிவர் சிறந்த சிவபக்தராகத் திகழ்ந்தார். அவருக்கு ராவணன், கும்பகர்ணன், விபீஷணன் என்று மூன்று பிள்ளைகளும் சூர்ப்பணகை என்று மகளும் இருந்தார்கள்.

ராவணன் கடுந்தவம் புரிந்து பல வரங்களைப் பெற்றான். இலங்கையை ஆளும் பொறுப்பை அவன் ஏற்றுக்கொண்டான். தன் தவவலிமையினாலும் வீரபராக்கிரமங்களாலும் அவன் மூவுலகத்தையும் வென்று தன் ஆட்சியின் கீழ்க் கொண்டு வந்தான்.

ஒரு நாள் ராவணன் தன் புஷ்பக விமானத்தில் வடதிசை நோக்கிப் பறந்து சென்றுகொண்டிருந்தான். திடீரென்று விமானம் பறக்க முடியாமல் நின்றுவிட்டது. அவ்விதம் புஷ்பக விமானம் நின்றதற்குக் காரணத்தைத் தெரிந்துகொள்ள ராவணன் கீழே இறங்கினான். இறங்கியவன் காரணத்தை ஆராய்வதற்கும் முன்பு அவனெதிரில் நந்திகேசுவரர் தோன்றினார்.

"ராவணா! பரமன் வாழ்கிற இந்தக் கயிலங்கிரியைப் பறந்து கடந்து செல்வதற்கு மமதைக் கொண்ட உன்னால் இயலாது. அதனால் நீ திரும்பிச் சென்றுவிடு!" என்று நந்திகேசுவரர் கூறினார்.

அதைக் கேட்ட ராவணன் கோபம் கொண்டான். "குரங்கு போன்ற முகமுள்ள நீயா என்னைத் திரும்பிப் போகச் சொல்கிறாய்? என் பராக்கிரமத்தை நினைத்துப் பார்க்காமல் என்னை இழித்துப் பேசிய நீ யார்?" என்று ராவணன் நந்திகேசுவரரிடம் கேட்டான்.

"ராவணா, என்னைக் குரங்கு என்று நீ இகழ்ந்து பேசியதனால் நீயும் உன் இலங்கையும் அழிந்து போவதற்கு ஒரு குரங்கே காரணமாகட்டும்" என்று நந்திதேவர் சபித்தார்.

ராவணனின் கோபம் மேலும் அதிகரித்தது. ஆத்திரத்தில் அறிவிழந்த அவன், "இந்த மலையையே நான் கெல்லி எறிந்துவிடுகிறேன், பார்!'' என்று சூளுரைத்தவாறு கயிலையை அடியோடு பெயர்த்தெடுக்க ஆரம்பித்தான்.

இமயம் பூகம்பத்தினால் ஆட்பட்டது போல ஆடிய ஆட்டத்தில் உமையவளே நடுங்கிப் போய்விட்டாள். இமயத்தில் வாழ்ந்து கொண்டிருந்த விலங்கினங்களும், தவம் செய்து கொண்டிருந்த முனிவர்களும் பயந்து கூக்குரல் எழுப்பினர். இவை அனைத்தையும் கண்ட பரமன் தம்முடைய ஞானநோக்கால் நடந்ததை உணர்ந்து கொண்டார். தம்முடைய பரம பக்தனான ராவணன் செருக்கில் முறைதவற முயல்வதை அறிந்த அவர் அவனுடைய செருக்கை அடக்க எண்ணினார்.

சிவபெருமான் மெல்லத் தம்முடைய வலக்காற்பெருவிரலால் மலையின்மீது அழுத்தி ஊன்றினார். இமயமலை சாதாரண நிலையை அடைந்தது. சிவபெருமானுடைய பராக்கிரமத்தைத் தாங்காமல் ராவணன் இமயமலையின் கீழே அகப்பட்டு நசுங்கித் தன் ஆற்றலை முற்றிலும் இழந்தான்.

ஆயிரம் ஆண்டுகள் அதே நிலையில் ராவணன் சிக்குண்டு கதறினான். அதன் பிறகு தன் தவற்றை உணர்ந்து கொண்டான். ஒரு தலையைக் கிள்ளி குடமாக்கி, ஒரு கையைத் தண்டாக்கி, அதன் நரம்பை வீணைத்தந்தியாகக் கொண்டு, இனிய இசையைப் பொழிந்தான். அவன் இசைத்த சாமகானம் எம்பெருமானின் இதயத்தில் இரக்கத்தைத் தோற்றுவித்தது. அவர் ராவணனை மன்னித்து விடுவித்தார். ★

---

## வரப்பெற்றோம் :

**அமரபாரதி**

[ஆசிரியர்: ரா. விழிநாதன், 12/131 கிழக்குத் தெரு, மேற்கு சி. ஐ. டி. நகர், சென்னை-600 035; தனிப்பிரதி ரூ. 1-50 ஆண்டுச் சந்தா ரூ. 17]

ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் ஆசியோடு இப் புதிய மாதப் பத்திரிகை பிப்ரவரி 1980 முதல் வெளி வருகிறது.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி, ஸ்ரீசிருங்கேரி ஜகத்குரு, தமிழக ஆளுநர், ராஜாஜி, ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர், கி வ ஜ, கிருபானந்த வாரியார், கா.ஸ்ரீ.ஸ்ரீ, விநோபா பாவே, பாரதியார், ரா.கணபதி சாண்டில்யன், ரவீந்திரநாத் டாகூர், வசுமதி ராமஸ்வாமி ஆகியோரின் கட்டுரைகள் மதிப்புரைக்கு வந்த முதல் இதழில் இடம் பெற்றுள்ளன. ஆன்மிகம், இலக்கியம், கலாச்சாரம் போன்றவற்றின் அடிப்படையில் இந்தப் பத்திரிகை வெளி வந்துள்ளது.

தமிழகத்தின் ஆன்மிக வளர்ச்சிக்கு அமரபாரதியின் பணி சிறந்து விளங்க ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் வாழ்த்துக் கூறுகிறது.

**1. ஸ்ரீ சங்கர ஜயந்தி மலர் (1979)**

**2. கிராதார்ஜுனீயம் (வேடனும் விஜயனும்)**

[வெளியிட்டோர் : ஸ்ரீ சங்கர பக்த ஜன சபா, 5, டெலிபோஸ்ட் காலனி குருக்குத் தெரு, மேல மாம்பலம், சென்னை-600 033].

ஸ்ரீசங்கர ஜயந்தி மலரில் அர்த்த நாரீச்வராஷ்டக ஸ்தோத்திரம், பில்ஹணஸ்தவம், மலயராஜஸ்துதி, அம்பா பஞ்சரத்னம், சுப்ரமண்ய மங்களாஷ்டகம் ஆகியவை சம்ஸ்கிருத மூலத்துடனும் தமிழ் உரையுடன் தரப்பட்டிருக்கிறது. இது தவிர ஸ்ரீவித்யா மெய்ப்பொருள் நாயனார் புராணம் ஓர் ஆராய்ச்சி, பன்னிரு ஜோயோதிர் லிங்கங்கள், தர்மம், முருகன் பெருமை, மாண்டுக்ய உபநிஷதம், நாராயணீயம் போன்ற தலைப்புகளில் கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன. வி.ஆர். கல்யாண சுந்தர சாஸ்திரிகள், வி.எஸ் வி. குருசுவாமி சாஸ்திரிகள், கயப்பாக்கம் சோமசுந்தரம் செட்டியார் ஆகியோரும் இந்த மலரில் கட்டுரைகள் எழுதியுள்ளார்கள். ஆறு ரூபாய் விலையுள்ள இந்நூல் தபாலில் பெற ரூ. 6-50 ஆகும்.

வியாசபாரதம் வனபர்வத்தில் அர்ஜுனன் சிவபெருமானை நோக்கித் தவம் செய்த வரலாறு இடம் பெற்றுள்ளது. அதனை மூல சுலோகங்களுடனும் தமிழ் விளக்கத்துடனும் மஞ்சக்குடி கே. ராஜகோபால சாஸ்திரிகள் இந் நூலில் வழங்கியுள்ளார். பிரதி விலை ரூ 1

ஸ்ரீசங்கர ஜயந்தி மலர், கிரதார்ஜுனீயம் ஆகிய இரண்டு நூல்களையும் சங்கர பக்த ஜன சபையின் சார்பாக ஆங்கீரஸ எஸ். வேங்கடேச சர்மா பிரசுரித்திருக்கிறார்.

—சத்தியகாமன்




# ஜாபால உபநிஷதம்

'அண்ணு' சுப்ரமண்யம்

## நான்காவது கண்டம்

**விதேகநாட்டின்** அரசராகிய ஜனகர் யாஜ்ஞு வல்கியரைப் பணிவுடன் அணுகி, ''பகவத்சொருபி யாகிய குருநாதரே! சன்னியாச முறையைக் கூறி யருளுங்கள்'' என்று கேட்டுக்கொண்டார்.

அதற்கு யாஜ்ஞுவல்கியர் பின்வரும் பதிலைக் கூறினர் : பிரம்மசரிய வாழ்க்கை முடிந்த பிறகு இல்லற வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும். இல்லற வாழ்க்கை முடிந்த பிறகு வானப்பிரஸ்தா சிரமம் ஏற்க வேண்டும். வானப்பிரஸ்தாஸ்ரமம் முடிந்த பிறகு சன்னியாசி ஆகவேண்டும்.

அல்லது வேறுவிதமாக, பிரம்மசரியத்தி லிருந்தோ இல்லறத்திலிருந்தோ நேரிடையாகவே சன்னியாசி ஆகலாம். (பிரம்மசரியத்திலிருந்து சன்னியாசியானுல்) வேத விரதங்களை முடித்தோ முடிக்காமலோ, ஸ்நாதகனுகியோ ஆகாமலோ, அக்கினி வழிபாடு செய்பவனுகவோ செய்யாத வனுகவோ எந்தப் பகலில் வைராக்கியம் பிறந் ததோ அந்தப் பகலிலேயே சன்னியாசி ஆகட்டும்.

சிலர் சன்னியாசம் ஏற்றுக்கொள்வதற்கு முன்பு பிராஜாபத்ய இஷ்டியைச் செய்கிருர்கள். ஆனுல் அப்படிச் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. மூன்று மூலப் பொருள்களைத் தியாகம் செய்துவிட் டாலே போதுமானது. அந்த மூன்று மூலப் பொருள்கள் சத்துவம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களாகும். (அவற்றைக் கடந்து குணுதீதன் ஆகவேண்டும்.)

அக்கினியைப் பார்த்து, 'எதிலிருந்து ருத்விக் உண்டானுரோ அந்தப் பிராணனே உன் பிறப் பிடம்; பிராணனுலேயே நீ பிரகாசிக்கிருய்; அதை அறிந்து, அக்கினியே! மேலே கிளம்பிப் பிராண னில் புகுந்துவிடு. எங்களுக்கு முக்திச் செல் வத்தைச் செழிக்கச் செய்' என்ற இந்த மந்திரத் தால் அக்கினிசக்தியைப் பிராணவாயுவுடன் மூக் கின் வழியாக உள்ளே இழுத்துக்கொள்ளவும். எது பிராணனே அதுவே அக்கினியின் பிறப்பிட மாகும். ஆகையால் 'ப்ராணம் கச்ச ஸ்வாஹா— பிராணனுக்குள் மறைந்து போ' என்று அதையே விரஜா ஹோமமாகக் கருதி, மானசிகமாகச் சன்னி யாசம் ஏற்றுக்கொள்ளலாம்.

அல்லது மக்கள் வசிக்கும் கிராமத்திலிருந்து பரி சுத்தமான அக்கினியைக் கொண்டுவந்து, மேற் கூறிய மந்திரத்தால் அக்கினியில் நெய்யை ஹோமம் செய்யவும். அக்கினி அருகில் கிடைக்கா விட்டால் ஜலத்தில் ஹோமத்தைச் செய்யலாம். ஜலமே எல்லாத் தேவைகளின் சொருபமாகும். 'ஸர்வாப்யோ தேவதாப்யோ ஜுஹோமி ஸ்வாஹா' என்று ஹோமம் செய்து எழுந்து, எல்லா நோயை யும் போக்கும் நெய் கலந்த அந்த மீதி ஹவிஸ்ஸை உட்கொள்ளவும். மோட்ச மந்திரத்தை—'மயா ஸந்ந்யஸ்த : மயா ஸந்ந்யஸ்த : மயா ஸந்ந்யஸ்த :' என்று மூன்று தடவை சொல்லவும். இதுதான் பிரம்மம், இதுதான் உபாசிக்க வேண்டியது என்று உபதேசம்.

இவ்விதம் யாஜ்ஞுவல்கியர் சொன்னதைக் கேட்ட ஜனகர், ''பகவானே! யாஜ்ஞுவல்கியரே! அது அவ்விதம் என்பதை உணர்ந்து கொண் டேன்'' என்ருர்.

## ஐந்தாவது கண்டம்

அத்ரி, ''யாஜ்ஞுவல்கியரே! பிராம்மணன் எப்படிப் பூணூல் இல்லாமல் இருக்கலாம் என்று தங்களைக் கேட்டுக்கொள்கிறேன்'' என்று யாஜ்ஞு வல்கியரிடம் கேட்டார்.

அதற்கு யாஜ்ஞுவல்கியர் பின்வரும் பதிலைக் கூறினர் : ஞானியாகிய ஒருவனுக்கு ஆத்மா எதுவோ அதுதான் யஜ்ஞோபவீதம் ஆகும். (யஜ்ஞோபவீதத்தை விட்டுச் சன்னியாசம் ஏற்கும் முறையைக் கூறுகிறேன்.) தீர்த்தத்தை ஆசமனம் செய்து, ஆபோசனம் செய்து பரிவ்ராஜகன் ஆக வேண்டும் என்பது விதியாகும். வீரர்களாகிய துறவிகள் சென்ற வழியைப் பின்பற்றி, ஞான வைராக்கியம் மேலிட்டவன் பட்டினியிருந்தோ, ஜலத்தில் பிரவேசித்தோ, அக்கினியில் பிரவே சித்தோ, மஹாப்ரஸ்தான யாத்திரையை மேற் கொண்டு, உடல் விழும்வரையில் வடக்கு நோக்கிப் போய்க்கொண்டே இருந்தோ, தேவையற்றுப் போன உடலை உகுத்துவிடலாம்.

[கருத்து—சன்னியாசிக்குப் பூணூல் வேண்டுமா என்ருல் வேண்டியதில்லை. வைராக்கியம் தீவிர

மாக ஏற்பட்டால் எல்லா அடையாளங்களையும் துறந்துவிடலாம். அடையாளங்களைத் தரிக்கும் உடலையுங்கூட அக்கினியிலோ ஜலத்திலோ விட்டு விடலாம்.]

உடலில் இருக்கும் வரையில் பரிவ்ராஜகன் துவ ராடை உடுத்துத் தலையை மழித்து, உடைமை எது வும் இல்லாதவனாகவும், பரிசுத்தனாகவும், எந்த உயிருக்கும் தீங்கு நினைக்காதவனாகவும், பிக்ஷை யில் கிடைக்கும் உணவைக்கொண்டு திருப்தி அடைபவனாகவும் இருந்தால், அவன் பிரம்ம மாகவே ஆவதற்கு உரியவனாவான்.

அவ்விதம் இருப்பதற்குச் சக்தியற்று நோய் வாய்ப்பட்டவனாக இருந்தால், மனதாலும் வாக் காலும் சன்னியாசத்தை மேற்கொள்ளலாம். மனதின் பரிபக்குவம்தான் முக்கியம். மேற்கூறிய இந்த வழிகளெல்லாம் பிரம்மாவால் கண்டுபிடிக்கப் பட்டவையாகும் பிரம்மஞானியான துறவி அந்த வழிகளைப் பின்பற்றிப் பரமஹம்சர்களை இலட்சிய மாகக் கொண்டு வாழ வேண்டும்.

இவற்றைக் கேட்ட அத்ரி மகரிஷி, ''பகவத் சொரூபியாகிய யாஜ்ஞவல்கியரே! தாங்கள் கூறியது உண்மைதான். அது அப்படியே ஆகும்'' என்று யாஜ்ஞவல்கியரிடம் தெரிவித்தார்.

## ஆறுவது கண்டம்

அந்த சன்னியாச விஷயத்தில் பரமஹம்சர்கள் என்று பிரசித்தி பெற்றவர்கள் ஸம்வர்த்தகர், ஆருணி, ச்வேதகேது, துர்வாஸர், ருபு, நிதாகர், ஜடபரதர், தத்தாத்ரேயர், ரைவதகர் ஆகியோர் ஆவர். அவர்கள் அடையாளம் காண முடியாதவர் கள், நடத்தை காண முடியாதவர்கள்; பித்தர்கள் அல்லராயினும் பித்தர்களைப் போன்ற நடத்தை உடையவர்கள்.

தண்டம், கமண்டலு, உக்கம் (கயிற்றினால் செய்த உறி), பாத்திரம், பரிசுத்தம் செய்யத் தீர்த் தம், சிகை, பூணூல் என்ற (சன்னியாசி, பிராம் மணன் முதலியவர்களுக்கான) எல்லா அடை யாளப் பொருள்களையும் ''பூ: ஸ்வாஹா'' என்று சொல்லி, ஹோமபுத்தியுடன் ஜலத்தில் போட்டு விட்டு, ஆத்மா ஒன்றையே விரும்பிப் பின்பற்ற வேண்டும்.

பிறந்த மேனியாக (ஆடை எதுவும் இல்லாமல்), உடைமை எதுவும் இல்லாமல் 'தத்' என்ற பிரம்ம மார்க்கத்தில் பரிபூரண நிறைவுற்றவனாகவும், பரிசுத்த மனம் படைத்தவனாகவும், பிராணனை உடலில் வைத்திருப்பதற்காக உரிய காலத்தில் வெளியே சென்று பிக்ஷையை ஏற்றுக் கொண்டு, வயிற்றையே உண்கலமாகக் கொண்டு (வேறு பாத்திரத்தில்கூடப் பிக்ஷையில் கிடைத்த உணவை வைக்காமல்), லாபத்திலும் நஷ்டத்திலும் சமமான மனநிலையில் இருந்து கொண்டு, பாழடைந்த வீடு, தேவாலயம், புல்மேடு, புற்று, மரத்தடி, குயவன் சாலை, அக்கினிஹோத்தரசாலை, நதிமணல், மலைப் பொந்து, குகை, மரப்பொந்து, மலையருவி போன்ற இடங்களில், தனக்கென்று ஒரு தங்குமிடம் இல்லாமல் வசித்துக் கொண்டு, எந்தப் பிரவிருத்தி யிலும் ஈடுபடாமல், மமகாரம் இல்லாமல், எப்போ தும் பரிசுத்தமான சாத்துவிகத் தியானபரனாக, அத் யாத்ம நிஷ்டனாக, (மோட்சமார்க்கத்திற்கு அனுகூல மில்லாத) அசுப கர்மாக்களை வேருடன் களைந்த வனாக, சன்னியாசத்தால் உடல் தன்னை விடுவதற்கு முன்பு தான் அதை விட்டவனாக இருப்பவன் எவனோ அவனே பரமஹம்சன் என்று பெயர் பெற்றவன்; அவனே பரமஹம்சன் என்று பிரசித்தி பெற்றவன் ஆவான். அத்தகைய பரமஹம்சர்களே வாழ்வாங்கு வாழ்ந்த உத்தமர்கள் என்று உப நிஷதம் கருதுகிறது. ●

---

ராமகிருஷ்ண விஜயத்தின் பின்வரும் பழைய பிரதிகள் மட்டும் விற்பனைக்குக் கைவசம் உள்ளன. பிரதிகள் தேவைப்படும் அன்பர்கள் உரிய தொகை செலுத்திப் பெற்றுக் கொள்ளலாம்.

| | | விலை |
|---|---|---|
| 1978 நவம்பர் சிறப்பு மலர் | ரூ. | 1—20 |
| 1978 நவம்பர் இதழ் தவிர ஏனைய பதினொரு இதழ்களும் பிரதி ஒன்று | ரூ. | 0—50 |
| 1979 நவம்பர் சிறப்பு மலர் | ரூ. | 2—00 |
| 1979 ஜனவரி & செப்டம்பர் இதழ்கள் கைவசம் இல்லை. ஏனைய ஒன்பது மாத இதழ்களும் பிரதி ஒன்று | ரூ. | 0—50 |

—ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்

# வேறுபாடு தெரியாது

வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்

காரைக்கால் அம்மையாராகிய குழந்தை இறைவனுடன் விளையாடுகிறது. அது தன் தந்தையின் மடியில் இருந்து விளையாடுகிறது. அது தன் தந்தையின் கழுத்தில் உள்ள மாலையை எடுத்துக் தலையில் வைக்கிறது. அங்கவஸ்திரத்தை எடுத்துத் தலையில் போடுகிறது. தலைப்பாகையை எடுத்துத் தோளில் வைக்கிறது. அது விளையாடுவதைக் கண்டு தந்தையின் மனம் பூரிக்கிறது. அம்மையார் மனத்தால் இப்படி ஒரு விளையாட்டுச் செய்கிறார்.

''அதோ வானத்தில் எழுகிறதே அந்த மதியை எடுத்து அம்பிகையின் திருமுடியில் நீ வைத்தால் இரண்டு சந்திரர்கள் திருமுடியில் தோன்றும். வலப் பாகத்தில் பிறை இருந்தால் அந்தப் பாகம் இறைவன் பாகம் என்று இனம் கண்டுகொள்ளலாம். இரண்டிடங்களிலும் சந்திரன் இருந்தால் நெடுந்தூரத் திலிருந்து பார்க்கும்போது எது இறைவன் திருமுடி, எது அன்னையின் திருமுடி என்று தெரியாமல் பிரமை ஏற்படும்''

இப்படி ஒரு கற்பனைக் காட்சியை எண்ணிப் பார்க்கிறார் அம்மையார்.

> இடப்பால வானத்து எழுமதியை நீஓர்
> மடப்பாவை தன் அருகே வைத்தால்.

எல்லா இடங்களையும் தன்னுள் அடக்கி வைத் திருப்பது வானம். அதனால் அதனை, ''அகலிரு வானம்'' என்று சொல்வார்கள். 'பல இடப்பகுதி களைத் தன்னிடத்தே கொண்ட வானத்தில் எழுந்து தோன்றும் மதியை நீ அம்பிகை உள்ள இடப் பக்கத்தில் வைத்தால் என்ன ஆகும்?' என்று சிந்திக் கிறார் அம்மையார். அம்மை இளமை மாறாதவள்; என்றும் கன்னியாக இருப்பவள். பெண்களுக்குரிய அணிகலனாகிய மடம் என்பதை, 'கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை' என்பார்கள். அதாவது, 'பிறர் அறிவுறுத்துவதைப் பொறுமை யோடு கேட்டுக்கொண்டு, தன் கருத்தை எளிதில் வெளிவிடாத அடக்கம்.' அம்பிகை இந்த மடமென் னும் குணத்தையும் சித்திரத்தில் வரைந்த பாவையைப் போல வாடாத அழகையும் பெற்றிருக் கிறாள். அதனால், ''மடப் பாவை'' என்று சொல் கிறார். மடம் என்பது இளமையையும் குறிக்கும்.

''வானத்தில் எழும் மதியை வலப்பாகத் திருமுடி யில் வைத்த மதியோடு இணங்க இடப்பாகத்திலும் வைத்தால் மாதிருக்கும் பாதியனாகிய அந்த வடிவத் தில் இரண்டு மதிகள் தோன்றும். அப்போது எது மலைமகளாகிய பார்வதியின்பாகம் என்று கண்டு கொள்ள முடியாது'' என்கிறார்.

> இடப்பால வானத்து
> எழும் மதியை நீஓர்
> மடப் பாவை தன் அருகே வைத்தால்
> —இடப் பாகம்
> கொண்டாள் மலைப்பாவை
> கூறு ஒன்றும் கண்டிலம்.

அம்மையும் அப்பனும் இணைந்திருக்கும் கோலத் தில் அவர்களை இனம் கண்டுகொள்ளும் அடையா ளம் இப்போது இரண்டிடத்திலும் இருந்தால் மலைப் பாவை இருக்கும் கூறு இதுதான் என்று தெரிந்து கொள்ள முடியாதே; இருவரையும் ஒருங்கே கும்பிடலாம். ஆனால் தனித்தனியே அம்மைக்கும் அப்பனுக்கும் கும்பிடுபோட வேண்டுமானால் அடை யாளம் தெரியாமல் திகைக்க வேண்டியிருக்குமே'.

''இந்த விஷயம் உனக்குத் தெரியுமா? மற்றவர் கள் எவ்வாறு வேற்றுமை காண்பார்கள் என்பதை நீ அறிந்தாயா? மூன்று கண்ணை உடைய எம்பெரு மானே, நாங்கள் இரண்டு கண்களால் பார்க்கிறோம். இரண்டு கண்களும் ஒன்றையே நோக்குபவை. எங்களுக்கும் மூன்று கண் இருந்தால் நடு நிலையில் நின்று பார்க்கமுடியும். அப்படி எங்களுக்கு இல்லையே! உள்ளதை உள்ளபடியே பார்க்கிற பார்வை எங்களுக்கு இல்லையே! ஒன்றைப் பார்த் தால் மற்றொன்றை அதே சமயத்தில் பார்க்கமுடி யாதபடி எங்கள் பார்வை இருக்கிறது. இதை நீ எண்ணிப் பார்த்தாயா? இல்லையானால் இப்போ தாவது எண்ணிப்பார்'' என்று சொல்கிறார் அம்மை யார்.

> இடப்பால வானத்து எழுமதியை நீஓர்
> மடப்பாவை தன்அருகே வைத்தால்—இடப்பாகம்
> கொண்டாள் மலைப்பாவை கூறுஒன்றும்
> கண்டிலம்; காண்
> கண்டாயே, முக்கண்ணாய், கண்.

இதன் பொருள்: மூன்று கண்ணையுடைய எம் பெருமானே, இடப் பகுதிகளைத் தன்னிடத்தே கொண்ட வானத்தில் தோன்றும் பிறையை நீ ஒப்பற்ற இளமையையுடைய சித்திரப்பாவை போன்ற உமாதேவியின் வாம பாகத்தில் வைத்துக்கொண்டால், அப்போது உன் இடப்பாகத்தைத் தனக்கு உரியதாக ஆக்கிக்கொண்ட மலைமடந்தையாகிய பார்வதிதேவியின் கூற்றைச் சிறிதும் யாம் கண்டிலோம், இதை நீ அறிந்தாயோ? இல்லையெனின் இப்போதாவது எண்ணிப்பார்.

இடப்பால-இடங்களின் பகுதிகளைத் தன்னிடத்தே கொண்ட; இது வானத்துக்கு அடை. மதியென்பது பெரும்பாலும் முழுத் திங்களைக் குறித்தாலும் இங்கே பிறையைச் சுட்டியது. ஓர்-ஒப்பற்ற. மலைப்பாவை-பார்வதி. அருகே என்றது பக்கத்தில் என்ற பொருளுடையது; இங்கே திருமுடியைக் குறித்தது. கூறு-பகுதி. ஒன்றும்-சிறிதும். கான்—அசை. கண்டாயே—ஏகாரம், வினா. முக்கண்ணாய் என்றது இருகண் இருந்தும் நடுநிலையில் நின்று பார்க்கும் பார்வை இல்லாதவர்கள் யாம் என்பதைக் குறிப்பித்தது. கண்-நினைப்பாயாக.

இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 71-ஆவது பாடல்.

# ஸ்ரீராமானுஜரின் நூல்களிலிருந்து

1. பிரம்மம் என்ற சொல்லை ஆராய்வோம். குற்றமே இல்லாத மிகவும் சிறந்த, எல்லா நற்குணங்களுடன் கூடியது பிரம்மம்.

2. 'ஜிக் ஞாச' என்றால் 'அறிய வேண்டுமென்ற' விருப்பத்தைக் குறிக்கிறது. எதை அறிய வேண்டும்?—பிரம்மத்தைத்தான் என்ற பதிலும் இதில் தொக்கியுள்ளது. கேள்வி, மனனம், இடையீடில்லாத தியானம் ஆகியவற்றைக் கொண்டு வேத வாக்கியங்களின் பொருளைத் தெளிதல் வேண்டும்.

3. இறைவன் பரிபூரணமான ஆனந்த மயமானவன்; நற்குணங்களின் கொள்கலன். தீமைக்கு எதிர்மறை. உலகத்தை ஆக்கிக் காத்து, நீக்கும் அலகிலா விளையாட்டுடையவன். மற்றைய எல்லாப் பொருள்களிலிருந்தும் வேறுபட்டவன். தன் இச்சையினால் தான் எண்ணியவற்றைச் செயலாற்றுபவன். கருணைக் கடல்.

4. அவனைச் சரணாக அடை. உன்னுடைய ஆத்மா இதனால் பிரகாசிக்கும். எல்லாத் தெய்வங்களுக்கும் அவன் தலைவன். அவனிடம் அன்பு வைத்தாயானால், என்றென்றும் அவன் நிழலில் வாழலாம். இந்த அனுபவம் உனக்கு மன அமைதியைத் தரும்.

5. என்னுடைய செல்வம், தந்தை, தாய் எல்லாமே இறைவன். அவனை என்று காண்பேன்? என்னுடைய இந்தக் கைகளினால், என்று அவன் தாமரைத் திருவடிகளை வருடப் போகிறேன்? என்று அந்தத் திருவடிகளுடன் ஒன்றி வேறுபாடொழிந்து சிறக்கப் போகிறேன்? அழியாப் பெருங்கடலாகிய இறைவனுடன் நான் பொருந்தப் போகும் நாள் எந்நாளோ?

6. உலகத்திற்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு, ஒரு முழுப் பொருளுக்கும் அதன் அங்கத்திற்கும் உள்ள தொடர்பாகும். இறைவன் ஒளியானால் உலகம் அந்த ஒளியால் பொலிவுறும் பொருளாகும். பராசரரும் இவ்வாறுதான் கூறுகிறார்: "நெருப்பின் சக்தியாகிய ஒளிப்பிழம்பு ஓர் இடத்திலிருந்து எங்கும் வெளிச்சம் தருகிறது. அது போலவே, இறைவனும் உலகை விளக்கமுறச் செய்கிறான்."

7. என் வாழ்க்கை அவனைப் பொறுத்து உள்ளது. நான் இல்லாமல் அவன் இல்லை. அவன் இல்லாமல் நான் இல்லை.

8. திருமகளுடன் இணைந்து மாசற்ற ஆனந்த மயமாக இருப்பவனும், சித், அசித் ஆகிய பொருள்கள் அனைத்தையும் தன் சரீரமாகக் கொண்டவனுமான திருமாலை வணங்குகிறேன்.

9. கண்ணால் சூரியனைப் பார்க்கிறோம் கண்ணும் அவனே, சூரியனும் அவனே, இந்தத் தொடர்பும் அவனே.

10. ஆத்மீக, அதற்குப் புறம்பான எல்லாவற்றையும் நிர்வகிக்கிற, சேஷ சயனத்தில் மகிழ்கிற ஆதிப் பரம்பொருளை வணங்குகிறேன்.

# துளசிதாசருக்கு ஒரு நினைவு மண்டபம்

சுவாமி கமலாத்மானந்தர்

துளசிதாசரின் நினைவாகக் காசியில் எழுப்பப்பட்டுள்ள துளசி மானஸ மந்திர், நாளெல்லாம் பொழுது போவதே தெரியாமல் பார்த்துக் கொண்டிருக்கும் வகையில் அழகிய கலைக் கோவிலாகத் திகழ்கிறது. பல லட்ச ரூபாய்ச் செலவில் முழுக்க முழுக்கச் சலவைக் கற்களைக் கொண்டு கட்டப்பட்டிருக்கும் இந்தக் கட்டிடம் அழகிய பூஞ்சோலையின் மத்தியில் அமைந்துள்ளது.

உள்ளே நுழைந்து அங்குள்ள மூன்று சந்நிதிகளில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீராமர், அன்னபூரணி, மகாவிஷ்ணு ஆகிய தெய்வமூர்த்தங்களைத் தரிசிக்கிறோம். சுவர்களில் தீட்டப்பெற்றிருக்கும் பத்து இராமாயணக் காட்சிகளையும் கண்டு களிக்கிறோம். அங்கே சுவரின் நான்கு பக்கங்களிலும் பொறிக்கப் பட்டிருக்கும் துளசிராமாயண சுலோகங்களைப் பார்த்தபடியே மாடியை அடைகிறோம்.

## கட்டிடத்தின் முதல் மாடியில்

கீழே ஹாலில் உட்புறத்திலுள்ள நான்கு சுவர்களிலும் துளசிராமயாயணத்தைப் பொறித்திருப்பதைப் போலவே, முதல் மாடியிலும் பொறித்திருக்கிறார்கள். கீழ் ஹாலில் ஆரம்பித்த ராமசரித மானஸ் முதல் மாடியில் நிறைவு பெற்றிருக்கிறது. இவ்விதம் இங்கே காண்பது போன்று துளசிராமாயணம் முழுவதும் சலவைக் கல்லில் வேறு எந்த இடத்திலும் பொறிக்கப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை.

கீழ் ஹாலில் உள்ள ஸ்ரீராமர் சந்நிதிக்கு நேராக, மேலுள்ள முதல் மாடியில் துளசிதாசரின் ஒரு சிலையை வைத்திருக்கிறார்கள். அங்கு வலக்கையில் அவர் ஜபமாலையுடனும் இடக்கையில் புத்தகத்துடனும் காட்சி தருகிறார்.

துளசிதாசரின் சிலைக்கு இடப்புறத்தில் மாடியிலேயே ஒரு நூல்நிலையம் வைத்திருக்கிறார்கள். அதைக் கடந்து சென்றால், மின்விசையில் இயங்கும் பொம்மைகளைக் கொண்ட ஒரு நிரந்தரக் கண்காட்சியை வைத்திருக்கிறார்கள். அந்த மாடியில் சுற்றிலும் இருக்கும் சுவர்களில் உள்ள பத்து இராமாயணக் காட்சிகளையும் பார்த்த பிறகு நாம் அங்கே செல்ல இருக்கிறோம். இப்போது இங்கு முதல் மாடியில் இருக்கும் பத்து இராமாயணக் காட்சிகளையும் ஒவ்வொன்றாகப் பார்க்கலாம்.

1. சிம்மாசனத்தில் இராமபிரானின் பாதுகைகளை வைத்துப் பரதன் வணங்குகிறார். 2. ராவணன் சோகமே வடிவான சீதையை ஒரு கையில் பிடித்திருக்கிறான். மறுகையிலுள்ள பெரிய ஒரு கத்தியால் அவன் ஜடாயுவைக் காயப்படுத்துகிறான்.

3. அடிபட்ட ஜடாயுவை ஸ்ரீராமர் தடவிக்கொடுத்துக்கொண்டிருக்கிறார். 4 அம்பு பாய்ந்த நிலையில் வாலி மண்ணில் மல்லாந்து விழுந்திருக்கிறான். அவன் தன் முன்னால் நின்றுகொண்டிருக்கும் இராம பிரானைப் பார்க்கிறான். படுத்திருக்கும் வாலியின் முன்பு ராமரும் லட்சுமணரும் நிற்கிறார்கள். படுத்திருக்கும் வாலியின் தலைமாட்டில் ஒரு புறமாக கதையைத் தரையில் போட்டுவிட்டுச் சுக்கிரீவன் வருத்தத்துடன் நின்றுகொண்டிருக்கிறான்.

5. இரண்டு அன்னங்கள் ஒரு சிம்மாசனத்தைத் தாங்கிய நிலையில் வானத்தில் பறக்கின்றன. ராமரும் சீதையும் அதில் அமர்ந்துள்ளார்கள். அவர்களுக்குப் பின்னால் சற்றுத் தள்ளி லட்சுமணன் அமர்ந்துள்ளார். 6. ஸ்ரீ ராமர் பரதனைக் கட்டித் தழுவிக் கொண்டிருக்கிறார். அவர்கள் இருவரையும் சுற்றிச் சீதை, ஒரு முனிவர், வணங்கும் நிலையில் ஆஞ்சனேயர் ஆகியோர் உள்ளனர்.

7. ராமரின் பட்டாபிஷேகம் நடைபெறுகிறது. (இந்தப் படத்திற்குக் கீழே ''ஸ்ரீ ராமபிரானின் பட்டாபிஷேகக் கதையைக் கேட்பதன் மூலம் மனிதன் துறவு மனப்பான்மையும் ஞானமும் பெறுகிறான்'' என்று எழுதியிருக்கிறார்கள்.) 8. பிரம்மா, விஷ்ணு, மகேசுவரன் ஆகிய மூவரும் காட்சி தருகிறார்கள். (கீழ் ஹாலிலும் மாடியிலும் சலவைக் கற்களில் பொறிக்கப்பெற்றுள்ள துளசி ராமாயணம் இந்த எட்டாவது படத்தின்கீழே முற்றுப்பெறுகிறது. அதற்கு அறிகுறியாக, மலர்களைப் பக்தியில் தோய்ந்த நிலையில் அர்ப்பிக்கும் துளசிதாசரின் திருவுருவம் காணப்படுகிறது.)

9. ராமேசுவரத்தில் ராமர் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து வணங்குகிறார். 10. சுக்கிரீவன் ராமரைச் சந்திக்கும் காட்சி. லட்சுமணன் அனுமன் ஆகியோரும் உடன் இருக்கிறார்கள்.

இத்துடன் மேல்மாடியில் சுவரில் உள்ள இராமாயணக் காட்சிகள் முற்றுப்பெறுகின்றன. அடுத்ததாக, மின்விசையில் இயங்கும் பொம்மை உலகத்திற்குச் செல்லப்போகிறோம்.

## பொம்மை உலகம்

துளசி மானஸ மந்திருக்குள் நுழைந்தது முதற் கொண்டு இதுவரை கட்டணம் எதுவும் இல்லாமல் பார்த்துக்கொண்டே வந்தோம். இப்போது

கட்டணமாக 20 காசு செலுத்தி மாயாஜால பொம்மை உலகிற்குள் செல்கிறோம்.

நுழைந்தவுடன், 'இந்திர உலகம் என்று வர்ணிக் கிறார்களே, அது இதுபோல்தான் இருக்குமோ?' என்ற வகையில், பலவித இசைகளின் கலவை பலவேறு தாளங்களுடன் காதில் விழுகிறது; வண்ண வண்ண விளக்குகள் மாறி மாறி எரிகின் றன; வண்ண வண்ணப் பொம்மைகள் சுழல் கின்றன; அவை எத்தனை எத்தனையோ காரியங் களைச் செய்கின்றன. இவற்றைச் சிறுவர்கள் மட்டும்தான் ரசிக்கிறார்கள் என்பதில்லை. பெரியவர் களும்கூடத்தான் அங்கே சென்றவுடன் குழந்தை களுள் குழந்தைகளாக மாறி அந்தப் பொம்மை யுலகத்தை மெய்மறந்து கண்டு ரசிக்கிறார்கள்.

கடைகள் ஒன்றை அடுத்து மற்றொன்று என்று அமைந்திருப்பதைப் போல இங்கே தனித் தனி யாகச் சில அறைகளைத் தடுத்திருக்கிறார்கள். இங்கே பதினொரு இடங்களில் வண்ண ஒளி விளக்குகளுக்கிடையில் பெரிய பெரிய பொம்மை கள் மின்விசையில் இயங்குகின்றன; அவை பாடு கின்றன; நடக்கின்றன; ஆடுகின்றன; பேசு கின்றன; இப்படி எத்தனை எத்தனையோ காரியங் களைச் செய்து அவை நம்மைப் பிரமிப்பில் ஆழ்த்து கின்றன. அவை ஒன்பது இடங்களில் இருப்பத னால் ஒவ்வோர் இடத்தில் இருப்பதற்கும் தனித்தனி எண்ணைக் கொடுத்துக் கீழே குறிப்பிட்டிருக்கிறேன்.

1. இங்கு இந்த இடத்தில் நான்கு நிகழ்ச்சிகள் விளக்கப்பட்டுள்ளன. அவை வருமாறு: (அ.) ராமர் வருகிறார்; அவரது திருவடி ஒரு பாறைமீது படுகிறது; உடனே அந்தப் பாறை வெடிக்கிறது; பாறை பிளந்ததும் அகல்யை காணப்படுகிறாள். (அகல்யை உத்தாரணம்) (ஆ.) கோசலை கோயில் அல்லது பூஜையறை போன்ற ஒரு வெற்றிடத்தை வணங்குகிறாள். அவள் வணங்கியவுடன் அங்கே மகாவிஷ்ணு தோன்றுகிறார். கோசலை மகா விஷ்ணுவை வணங்குகிறாள். மகாவிஷ்ணுவின் தலையைச் சுற்றி ஒளியை உமிழ்ந்தபடி சுழலும் சக்கரம் அதிஅற்புதமாக இருக்கிறது. மகாவிஷ்ணு கோசலையை ஆசிர்வதிக்கும் நிலையில் கையை ஆட்டுகிறார். (இ) பசுவும் கன்றும் நிற்கின்றன. ஒரு பெண் பசுவின் அருகில் அமர்ந்து பால் கறக் கிறாள். அந்தப் பாலைக் கௌசல்யை சிறுவனாக இருக்கும் ராமருக்குத் தருகிறாள். (ஈ.) (தாடகை வதம்) ஒரு பெரிய பாறையின் இடையில் அரக்கி யான தாடகை காணப்படுகிறாள். எலும்புகளையும் மண்டையோடுகளையும் மாலையாக அணிந்திருக்கும் அவள் நீண்ட கோரைப்பற்களுடன் இருக்கிறாள். அவளை நோக்கி அம்பு விடும் நிலையில் ஸ்ரீ ராமபிரான் காணப்படுகிறார். அவர் அருகில் லட்சுமணனையும் விச்வாமித்திரரையும் காண்கிறோம்.

2. (அ.) வில் ஒடிந்து அருகில் இருக்கிறது. அங்கே பலர் கூடியிருக்கிறார்கள். ராமருக்கு மாலை அணிவிக்கும் நிலையில் சீதையை இங்கே பார்க் கிறோம். (சீதையின் சுயம்வரக் காட்சி) (ஆ.) லட்சுமணனுக்கும் சீதைக்கும் இடையில் ஸ்ரீ ராமர் நின்றுகொண்டிருக்கிறார். ஸ்ரீ ராமபிரானின் திரு வடிகளைக் குகன் கழுவுகிறான். (இந்த இடத்தில் 'படகோட்டிக் கிடைத்த பாக்கியம் केवट के भाग्य என்று எழுதப்பட்டிருக்கிறது) (இ.) மூதாட்டி யாகிய சபரிதரும் பழங்களை ஏற்று ஸ்ரீராமர் உட்கொள்கிறார்.

3. (அ.) பறவையாகிய ஜடாயுக்கு ஸ்ரீராமர் மோட்சம் தருகிறார். (ஆ.) வாலியும் சுக்கிரீவனும் கதைகளைக்கொண்டு போரிடுகிறார்கள். சற்றுத் தூரத்தில் ராமரும் லட்சுமணனும் நின்றுகொண் டிருக்கிறார்கள். ஸ்ரீ ராமபிரான் வாலியை நோக்கி அம்பு எய்யும் நிலையில் இருக்கிறார்.

4. (அ.) ராசலீலை நடைபெற்றுக் கொண்டிருக் கிறது. கண்ணனும் ராதையும் நடுவில் நிற்க, அவர்களைச் சுற்றிக் கோபியர் வட்டமாக நின்று கொண்டிருக்கிறார்கள். (ஆ.) ஆஞ்சனேயர் நின்ற நிலையில் இருக்கிறார். சிறிது நேரத்தில் தமது மார்பைப் பிளந்து காட்டுகிறார். அவரது மார்பில் ராமரும் சீதையும் காட்சி தருகிறார்கள். (வலப்புறத் திலும் இடப்புறத்திலுமாக இதே பொம்மைகள் இரண்டு இருக்கின்றன.) (இ.) ஸ்ரீராமர் போகிறார். அதைக்கண்டு மனம் ஒடிந்தவராக தசரதமன்னன் படுத்துவிட்டார். (ஈ.) சிறுவனை துருவன் கடுந் தவத்தை மேற்கொண்டிருக்கிறான். (உ.) மகா விஷ்ணு பாம்பணையில் பள்ளிகொண்டிருக்கிறார். அவரது திருவடிகளை மகாலட்சுமி லேசாக வருடிய படி இருக்கிறாள். (ஊ.) மகாகணபதி பக்தர்களுக்கு அருள்புரியும் கோலத்தில் வீற்றிருக்கிறார். (எ.) சிங்கத்தின்மீது அமர்ந்த நிலையில் துர்க்கை பக்தர் களை ஆசிர்வதிக்கிறாள். (ஏ.) நரசிம்மமூர்த்தி இரணி யனின் வயிற்றைக் கிழிக்கிறார். கைகூப்பிய நிலை யில் அங்கே பிரகலாதனும் இருக்கிறான். (ஐ.) வெண்ணெய்த் திருடும் நிலையில் கண்ணன் இருக் கிறான். (ஒ) கோபிகளின் ஆடைகளைத் திருடிக் கொண்டு கண்ணன் மரத்தில் அமர்ந்திருக்கிறான் கீழே கோபிகள் இருக்கிறார்கள்.

5. சீதையின் அக்கினிப்பிரவேசம். தீயின் நாக்குகள் அசைந்து அசைந்து தத்ரூபமாக இருக்கின்றன.

6. பொம்மை உலகத்திலுள்ள எல்லாக் காட்சிகளிலுமே முதல் தரமாக அமைந்திருப்பது மீரா பஜன் காட்சியே ஆகும். பாடிக்கொண்டே மீரா பாய் அங்கும் இங்குமாக அசைந்தாடுகிறாள். மீராவின் ஒரு கையில் தம்புரா ஒலிக்கிறது; மறு கையில் சப்ளாக்கட்டை ஒலிக்கிறது. மீராவைச் சுற்றிலும் ஆங்காங்கே எட்டுக் கண்ணன் சிலைகள் இருக்கின்றன. அந்தச் சிலைகள் கண்ணனை மீரா எங்கும் காண்கிறாள் என்பதை உணர்த்துகின்றன. மீரா பஜன் இசைத்தட்டும் இங்கு ஒலிக்கிறது. பாதரசம் பூசிய முகம் பார்க்கும் கண்ணாடிகள் சிறியனவும் பெரியனவுமாக மீராவைச் சுற்றிலும் இருப்பதால் அவற்றில் பல மீராக்களையும் பல கண்ணன்களையும் காண்கிறோம். இவ்விதம் கண்ணாடி வீட்டிலுள்ள மீராபஜன் காட்சி கண்கொள்ளாக் காட்சியாக அமைந்திருக்கிறது.

7. (அ.) கண்ணன் பகாசுரனை வதைக்கும் காட்சி. (ஆ.) கண்ணன் பூதனையை வதைக்கும் காட்சி.

8. ராமர் பட்டாபிஷேகம்.

9. மலையில் அமர்ந்திருக்கும் சிவபெருமான் பார்வதிக்கு உபதேசித்துக்கொண்டிருக்கிறார். அவர் கூறுவதைப் பார்வதி கைகூப்பிக் கேட்டுக்கொண்டிருக்கிறாள்.

10. துளசிதாசர் சந்தனம் அரைத்துக் கொண்டிருக்கிறார். அவர் அருகில் ராமரும் லட்சுமணரும் இருக்கிறார்கள். ஆஞ்சனேயர் ஒரு மரக் கிளையில் அமர்ந்திருக்கிறார். (துளசிதாசரின் வாழ்க்கையில் சித்திரகூடத்தில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சி இது.)

11. ஒரு முதியவர் (கண்ணனின் குரு) தம்புரா வாசித்தபடி சப்ளாக்கட்டையைக்கொண்டு தாளம் போட்டபடி மெய்மறந்து பாடிக்கொண்டிருக்கிறார். பாலகனாகிய கிருஷ்ணன் அந்த முதியவரின் முன்னால் அமர்ந்து அவர் பாடுவதைக் கேட்டுக்கொண்டிருக்கிறான். (கடைசியிலுள்ள மூன்றும் ஒரே இடத்தில் தனித்தனியாக இருக்கின்றன.)

இத்துடன் துளசிமானஸ மந்திரில் பார்க்க வேண்டியவை அனைத்தும் முற்றுப்பெறுகின்றன. கடைசியாகக் குறிப்பிட்ட மின்சாரத்தால் இயங்கும் பொம்மைகளை இரவுநேரத்தில் மின்சார ஒளியில் பார்க்கும்போதுதான் முழுமையாக ரசிக்கமுடியும். ✻

---

நான் பயப்படாதவன் போல என்னை எண்ணிக்கொண்ட காரணத்தால் படிபடியாக என்னிடத்திலிருந்து பயம் ஒழிந்துவிட்டது.

—ரூஸ்வெல்ட்

மனிதனுடைய மனக்கோட்டைகள் எவ்வளவுதான் வானளாவி இருந்தாலும் காலம் ஒரு தடவை பூ என்று ஊதும்போது தரைமட்டமாகி விடுகின்றன.

—காண்டேகர்

மக்கள் எந்த இடத்தில் ஒன்றுகூடித் தங்கள் இதயத்திலிருந்து கடவுளின் திருநாமத்தைக் கூறினாலும், அது கடவுள் வாழும் ஸ்தலமாகிவிடுகிறது; அது அவரது கோயில் ஆகிவிடுகிறது.

—பாகவதம்

ஆத்ம ஞானத்தை—அதாவது எல்லாம் ஒன்று; எல்லாம் கடவுள்; எல்லாம் இன்பம் என்ற ஞானத்தை—ஒருவன் தனது நித்திய அனுபவத்தில் பயன்படுத்தி நன்மையெய்த வேண்டுமாயின் அதற்காக அவன் கைக்கொண்டொழுக வேண்டிய சாதனங்களில் மிக உயர்ந்தது தவம்.

—மகாத்மா காந்தி

விடுதலைக்கு ஒரே வழிதான் உள்ளது; அதாவது, எந்த நிலையிலும் தன்னை (தன்னுடைய நிஜ ஸ்வரூபத்தை) மறவாமல் இருப்பதே ஆகும். துன்பங்கள் யாவும் தொலைவதற்கு ஒரே வழி, 'நான் யார்' என்னும் விசாரணையே. பரமானந்தமாக இருப்பதற்கு அதுவே வழி.

—பகவான் ஸ்ரீரமணர்

# ஆன்மிக உரையாடல்

## ஜூலை 2, 1920

ஸ்ரீராமகிருஷ்ண சங்கத்தைச் சேர்ந்தவரும், வேதாந்த வகுப்பு நடத்துபவருமான ஒரு சாதுவை விளித்து சுவாமி துரியானந்தர் உரையாடலைத் தொடங்கினர்.

சுவாமி துரியானந்தர்: இன்று உங்கள் வேதாந்த வகுப்பு இருந்ததா?

அ: இருந்தது மகராஜ்.

சுவாமி துரியானந்தர்: இன்று பொருள் என்ன? தத்து ஸமந்வயாத்:[1] '(இந்த உலகின் தோற்றம், இருப்பு, அழிவு யாவும் எவற்றிடமிருந்து உண்டாகின்றனவோ) அந்தப் பிரம்மமானது வேத சாஸ்திரங்களாலேயே அறியத்தக்கது; ஏனெனில் அதுவே (பிரம்மமே) எல்லா வேதாந்த வாக்கியங் களுக்கும் முக்கியமான பொருளாகும்.'

அ: ஆம் மகராஜ் 'மாறிக்கொண்டே சாச்வத மாக இருப்பது' (அதாவது பிரகிருதி வசமான உலகம்), 'மாருத பூர்ணமாகச் சாச்வதமாக இருப்பது' (புருஷதத்வமான பிரம்மம்) என்பன பற்றி விவாதித்தோம்.

சுவாமி துரியானந்தர்: 'மாறிக்கொண்டே சாச்வதம்' என்கிற சொற்றொடரே 'சூடான பனிக் கட்டி' என்பது போலத் தொனிக்கிறது. இது சாங்கியர் கள் கொள்கை என்று நினைக்கிறேன் பிரகிருதி என்பது சத்வம் (சமநிலை), ரஜஸ் (செயல்வேகம்), தமஸ் (செயலின்மை) என்ற முக்குணங்களால் ஆனது. இவையே பலவித மாறுபாடுகளுக்கு ஆளாகி ஸ்ருஷ்டியை ஏற்படுத்துகின்றன. ஒரு நாள் டாக்டர் எஸ். இதே கேள்வியை என்னிடம் கேட்டார். 'முக்குணங்கள் பிரகிருதியை உண் டாக்குகின்றன. ஆகையால் இக்குணங்கள் மாறு பாடு அடைகின்றன எனில் பிரகிருதி தானாக இருக் கும் தன்மையே மாறிவிடவில்லையா?' என்று கேட் டார். நான் அதற்கு, 'பிரகிருதி முழுவதுமே மாறு தலுக்கு ஆட்படவில்லைதான், அதில் ஒரு பகுதியே ஆளாகிறது. பிரகிருதியும் இருக்கிறது, மாறுபா டற்ற பிரகிருதியும் இருக்கிறது. உதாரணமாக, எங்கோ ஓரிடத்தில் பால் தயிராகத் திரிகிறது என் னும்போது உலகத்திலுள்ள எல்லாப் பாலும் தயிராக மாறிவிடுவதில்லை—வேறு இடங்களில் அப்போதும் பால் உள்ளது. வேதாந்தம் புருஷனும் பிரகிருதியும் ஒன்றுதான் என்று சொல்கிறது. (தன் உடலையே சுட்டி) இதில்கூட நீ ஒரே இடத்தில் பிரகிருதி, புருஷன் இரண்டும் கூடி வசிப்பதைப் பார்க்க வில்லையா?'[2]

ஒரு தானியமணியும்கூட இரண்டு பாதிகளாகவே இருக்கிறது.

**புருஷ: ப்ரக்ருதிஸ்தோ ஹி புங்க்தே ப்ரக்ருதிஜாந் குணாந் |**
**காரணம் குணஸங்கோஸ்ய-ஸதஸத்-யோநி ஜந்மஸு ||** 3

'புருஷனைவன் பிரகிருதியில் இருந்துகொண்டு, பிரகிருதியினின்று பிறக்கும் குணங்களை அனுபவிக் கிறான். ஜீவன் உயர்ந்த, தாழ்ந்த சரீரங்களில் பிறப்பெடுப்பதற்கு, குணங்களில் பற்றே காரண மாகும்.'

**யஏவம் வேத்தி புருஷம் ப்ரக்ருதிம் ச குணை ஸஹ |**
**ஸர்வதா வர்த்தமாநோபி ந ஸ பூயோபிஜாயதே ||** 4

'புருஷனையும பிரகிருதியையும் அதன் (முக்) குணங்களோடுகூட எவன் இவ்வாறு அறிகிறானே, அவன் எந்த நெறியில் வாழ்ந்தாலும், மறுபடியும் பிறப்பதில்லை.'

ஆத்மசாதனை என்பது இந்தப் பிரகிருதியை சுத்தி கரிப்பது தவிர வேறென்ன? வைஷ்ணவர்கள் கண்

---

1. பிரம்மஸூத்ரம்: 1-1-4.
2. க்ஷேத்ரம் எனப்படும் சரீர, மனங்கள் பிரகிருதி; அதனை அறியும் க்ஷேத்ரஜ்ஞுனை ஆத்மா புருஷன். க்ஷேத்ரமே மாறுபாடுறுவது. க்ஷேத்ரஜ்ஞன் மாறுபாடு களால் பாதிப்புறாமல் எப்போதும் தானாயிருப்பது.
3. கீதை-13 · 21
4. கீதை-13 · 23

ணன் மாத்திரமே புருஷன், மற்ற யாவும் பிரகிருதி என்கிறார்கள்'[5] 'தானே ஒரு பிரகிருதியாக இருந்து கொண்டு இன்னொரு பிரகிருதியை ஏன் (யாசகத்துக்காக) அழைக்கவேண்டும்?' என்று சைதன்யர் கேட்பது வழக்கம்.[6] (பெண்ணான) பிரகிருதியே பிரகிருதியை வரிப்பதென்பது எங்கேனும் உண்டா? பிரகிருதி புருஷனின் (ஆடவனின்) ஸங்கம் பெறுமாறே நாம் செய்யவேண்டும். மீராபாய் பிருந்தாவனத்துக்குச் சென்றபோது சநாதனரைப்[7] பார்க்க விரும்பினாள். ஆனால் அவரோ அவள் பெண்ணாகப் பிறந்தவள் என்ற காரணத்தைச் சொல்லி (ஆடவ சாதுவாகிய தாம்) அவளைப் பார்ப்பதற்கில்லை என்று மறுத்துவிட்டார். அவர் பரமத் தியாக வைராக்கிய முள்ளவர் என்று உங்களுக்குத் தெரிந்திருக்கும். இதைக்கேட்ட மீரா, 'பிருந்தாவனத்திலே நான் ஒரே ஒரு புருஷனையே அறிவேன்; அவன் கண்ணனே. இப்போது இரண்டாவது புருஷராக இங்கே வந்துள்ள இவர் யாராம்? நல்லது, அவரை (இந்த அதிசயப்பிறவியை) நான் பார்த்தாக வேண்டும்' என்றாள். (இவ்வாறு அவள் கூறிய மறுமொழியில் சநாதனர் தெளிவு பெற்றதால்) அவ்விருவரும் பிறகு சந்தித்தனர். இருவரும் உயர்நிலை எய்திய ஜீவர்கள்; ஆகையால் இருவருமே பரவசமடைந்தனர். 'எவள் வழியே ஸ்ரீகிருஷ்ணன் தன் தெய்விக லீலையை வெளிப்படுத்துகிறானோ, எவளிடம் நான் பிறப்பெடுத்தேனோ அவளே இவள்' என்ற வார்த்தைகளைச் சொல்லி சநாதனர் மீராவை நமஸ்கரித்தார்.

ஒருவன் தனது சொந்த அனுபவங்களோடு உபதேசங்களை ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளாத வரையில் வேதாந்தம் படிப்பது வீண் வேலை என்ற அளவுக்குச் சொல்லிவிடலாம்.

• • •

கிழக்கு வங்காளத்தைச் சேர்ந்த ஓர் இளைஞர் வந்து சுவாமி துரியானந்தரை வணங்கினார். அவர் அந்தப் பகுதியைச் சேர்ந்த ஓர் உயர்ந்த ஆத்மிக புருஷரிடம் மந்திர தீக்ஷையும் பிரம்மசரிய தீக்ஷையும் பெற்றுக் கடந்த பதினோராண்டுகளாக சாதனை செய்து வருகிறாராம். அண்மையில் அவர் சாதனையிலும் சத்சங்கத்திலும் நாட்களைக் கழிப்பதற்கென்றே காசிக்கு வந்திருக்கிறாராம்.

சுவாமி துரியானந்தர் (அந்தப் புதுமுகத்திடம்): உன் தோற்றத்தில் வைராக்கிய அறிகுறிகள் காணப்படுகின்றன. நல்லது நீ எவ்விதமான வைராக்கியத்தை உணர்கிறாய்? அது உண்மையான வைராக்கியமா, அல்லது ஏதோ காரணம் ஏற்பட்டதால் உண்டான வைராக்கியமா? ஏதேனும் தாற்காலிகக் காரணத்தால் ஏற்பட்டதாயின், அக்காரணம் மறைந்தவுடன் வைராக்கியமும் மறைந்துவிடும். நீ சிறை செய்யப்பட்டாயா?

இளைஞர்: இல்லை, மகராஜ்.

சுவாமி துரியானந்தர்: எப்படியானாலும் இந்த வைராக்கிய உணர்ச்சி இருப்பது நல்லதிருஷ்டமே. ஆத்மா எது, ஆத்மாவல்லாதது எது என்று பகுத்தறிவதன்றி வைராக்கியம் என்பது என்ன? 'புருஷப் பிரகிருதிகளிடை பாகுபாடு' என்பதே அதற்கு மற்றொரு பெயர்.

காசியில் தொடர்ந்து தங்க அவர் உத்தேசித்திருக்கிறாரா என்று கேட்க, அந்த இளைஞர் சூழ்நிலை அனுகூலமாக இருந்தால் அவ்விதமே செய்ய விரும்புவதாகப் பதில் கூறினார்.

சுவாமி துரியானந்தர்: ஒருவன் நல்ல, நெறி சார்ந்த வாழ்வு நடத்தினால் எந்த நாட்டிலும் வசிக்க முடியும். இந்தியாவைப்பற்றிக் கேட்க வேண்டாம். உலகமனைத்தும் இறைவனுடையது. எனவே

---

5. சாங்கிய தத்துவப்படி புருஷன், பிரகிருதி என்பன முறையே ஆத்மாவையும் இயற்கையையும் குறிப்பன. இயற்கை என்பதைக் குறிப்பாகப் பிரபஞ்சத்தின் உபாதான காரணம்—அதாவது பானைக்குக் களிமண்ணைப் போன்றது—எனலாம். இந்தப் பிரகிருதி ஜடமானது, மாறிக்கொண்டே இருப்பது, ஆயினும் சாச்வதமானது. புருஷனின் அனுபவங்கள் இதனைக்கொண்டே ஏற்படுகின்றன. புருஷனே அறிவுமயமானவன், மாறாதவன், நித்யன் எண்ணிக்கை கடந்த அனந்தன்; இவனே தன்னைப் பிரகிருதியுடன் ஸாம்யப்படுத்திக் கொள்வதால் இன்பம், துன்பம் முதலான அனுபவங்களை அடைகிறான். இரண்டும் (புருஷனும், பிரகிருதியும்) சுதந்திரமானவை. புருஷனானவன் அனுபவத்தின் லட்சிய ஸ்தானத்தில், தான் எக்காலும் பிரகிருதியின் தொடர்பற்றுத் தனித்து நிற்கும் தத்துவம் என்பதை உணர்கிறான். இதுவே கைவல்யம் எனப்படும் மோக்ஷநிலையாகும்.

புருஷன், பிரகிருதி என்பனவே முறையே ஆண், பெண் என்ற இன்னோர் அர்த்தமும் பெற்றுள்ளன.

6. சைதன்யரின் சீடரான (இளைய) ஹரிதாஸ் வயதும் கௌரவமும் மிக்க ஒரு பக்தையிடம் குருநாதருக்காகக் கொஞ்சம் அரிசி யாசித்தபோது அவரைக் கண்டித்து ஸ்ரீ சைதன்யர் கூறியது.

7. இவர் ஸ்ரீ சைதன்யரின் சீடரான ஒரு பெரும் வைணவ சாது. பூர்வத்தில் இவர் வங்காள நவாப்பிடம் அமைச்சராக இருந்தவர். பிற்பாடு பகவானுக்காக எல்லாவற்றையும் துறந்தார்.

அதில் எவருக்கும் எங்கே தடை (அடக்)[8] இருக்கிறது? எவனுக்கு மனதில் உறுத்தல்கள் இருக்கின்றனவோ அவனுக்கு வெளியிலும் தடைகள் ஏற்படுகின்றன'—இது ஒரு சிறந்த பெரியாரின் வாக்கு. உனக்கு அவரைப்பற்றித் தெரியுமா? ரஞ்சித்ஸிங்கின் படைத் தலைவராக இருந்த ஹரி ஸிங்தான் அவர். எல்லைப்புறத்தில் ஆப்கானியர்கள் தொல்லை கொடுக்கத் தொடங்கினர். அவர்களைத் துரத்தும்போது அடக் என்ற இடத்தைத் தாண்டியவுடன் பின்வாங்கிக் கொண்டு அங்கேயே நின்று விடுவர். அடக்கை கடந்து சென்றால் ஒருவர் தம் மதத்திலிருந்து விலக்கப்படுவர். எனவே அப்பால் சென்று ஆப்கானியரை அடக்குவது பிரச்னையாகிவிட்டது அப்போது ஹரிஸிங்கை அழைத்து, நெருக்கடி தீர யோசனை கேட்டபோதுதான் மேலே சொன்னபடி கூறினார். அவரே அடக்கைத் தாண்டிச் சென்று அத்துமீறிப் பிரவேசித்தவர்களுக்குக் கடுமையான பாடம் கற்பித்தார். ஹரிசிங் ஒரு வைஷ்ணவர் (பக்தர்), ஆனால் எப்படி ஞானி போலப் பேசியிருக்கிறார்! நல்லவனாகவும், நன்னெறியுடனும் இருந்தால் நீ விரும்பும் எந்த இடத்திலும் வாழலாம். இன்பமாகவே வாழ்வாய். நல்லது, அவனொருவனே (இறைவனே) உண்மை, அவனே நன்மை; அவனையன்றி உண்மையோ நன்மையோ எதுவுமில்லை.

உனக்கு ஒரு சின்னக் கதை சொல்கிறேன். சீதை அபகரிக்கப்பட்டபின் ராம லட்சுமணர்கள் தண்டகாரண்யத்தில் அலைந்தபோது ஒரு ரமணீயமான இடத்தைக் கண்டனர். மழைக் காலமான நான்கு மாதங்களை அங்கே கழிக்க விரும்பிய ராமர் லட்சுமணரிடம், 'தம்பீ, சற்றுப்போய் இந்த வட்டாரத்தில் யாராவது இருக்கிறார்களா பார். இவ்விடத்தின் சொந்தக்காரரின் அனுமதியின்றி நாம் எப்படித் தங்க முடியும்?' என்றார் லட்சுமணர் வனத்தில் அங்கும் இங்கும் தேடி ஒரு சிவாலயத்தைக் கண்டார். ஆனால் அங்கு மனித வாடையே இல்லை. திரும்பி வந்து ராமரிடம் விஷயத்தைச் சொன்னார். ராமர் 'மிகவும் நல்லதாயிற்று! சிவன்தான் இவ்விடத்தின் அதிதெய்வம். போய் அவரது அனுமதி பெற்றுவா' என்றார். உத்தரவுப்படி லட்சுமணர் கோயிலுக்குப்போய் அனுமதி கேட்டார். உடனே சிவமூர்த்தத்திலிருந்து ஓர் ஒளியுருவம் வெளிப்பட்டுச் சில நிமிடங்கள் அற்புதக் கோலத்தில் நடனமாடிவிட்டு மறைந்தது. இதிலிருந்து ஒன்றும் அர்த்தம் செய்துகொள்ள இயலாத லட்சுமணர் குழம்பியவராகத் திரும்பிவந்து நடந்ததையெல்லாம் ராமரிடம் தெரிவித்தார். அதைக் கேட்ட ராமர், 'பர்ணசாலையைக் கட்டு. நமக்கு அனுமதி கிடைத்துவிட்டது' என்றார். 'அதெப்படி?' என்று லட்சுமணர் கேட்டார். ராமர் மறுமொழி தந்தார்: 'நாக்கையும் காம உணர்ச்சியையும் கட்டுப்படுத்திவிட்டால் இங்கே மட்டுமல்ல, விருப்பமான எந்த இடத்தில் வேண்டுமானாலும் சுகமாக வாழலாம்.'

**ப்ருதிவ்யாம் யானி பூதானி ஜிஹ்வோபஸ்த நிமித்தகம் |**
**ஜிஹ்வோபஸ்தபரித்யாகே ப்ருதிவ்யாம் கிம் ப்ரயோஜனம் ||**

'உலகிலுள்ள ஒவ்வொரு ஜீவராசியும் நாக்கு ருசி, பாலுணர்ச்சி இவற்றின் திருப்தியையே தேடுகின்றன. இவ்விரு வேட்கைகளையும் விட்டவருக்கு உலகத்தால் என்ன பயன்?'

நல்லது; நாக்கு, காமம் என்ற இரண்டிலிருந்து தான் அத்தனை கோளாறும்! ஹிமாலயத்தில் ஆத்ம சாதனைகளுக்கு ஏற்ற எத்தனையோ ஏகாந்தப் பிரதேசங்கள் உள்ளனவே, சாதுக்கள் ஏன் அங்கே போய் வாழக்கூடாது? (இப்படிச் செய்யாததற்கு) நாக்கின் தூண்டுதலே காரணம். சுவையான உணவு வகைகளின் வேட்கை அவர்களை அங்கேயிருந்து விரட்டி விடுகிறது. ஏதோ ஓர் இடத்திலேயே ஏன் சாதுக்களால் அமைதியாக வாழ முடிவதில்லை? காரணம், ஒன்று, அவர்கள் நாக்குப் பொல்லாததாக இருந்து பிறருடன் சண்டை செய்வது; அல்லது ருசியான சாப்பாட்டுக்காகத் தவித்துத் திரிவது; அல்லது காமவேகம். அதனால்தான் ஒரு சாது ஒரே இடத்தில் பன்னிரண்டு ஆண்டுகள் அமைதியாக வாழ முடிந்து விட்டால் அவன் 'தன் ஸ்தானத்தை அப்பழுக்கற நிலைநாட்டி விட்டான்' என்று சொல்லப்படுகிறது. பன்னிரண்டாண்டுக் கட்டுப்பாடு என்பது வேடிக்கையல்ல!

பாலுணர்ச்சி மீது பூர்ண அடக்கும் திறன் பெறுவது மிகவும் கடினம். 'அந்தப் பெண் செத்து அவளுடைய சாம்பலைக் காற்று வாரிக் கொண்டு போக விட்ட பின்தான் ஒருவர் அவள் புகழ் பாடலாம்.'[9] இதைப் பற்றி ஒரு கதை உண்டு. ஒரு நாள் அக்பர் சக்ரவர்த்தி தமது அமைச்சர் பீர்பலிடம், 'போய் உன் அம்மாவை உணர்ச்சி வேகத்திலிருந்து விடுபட்டு விட்டாளா என்று விசாரித்து

---

8. இம் மேற்கோளின் மூல ஹிந்திச் செய்யுளில், பஞ்சாபிலுள்ள 'அடக்' என்ற ஊர், தடை எனப் பொருள்படும். 'அடக்' என்ற பதம் ஆகியவற்றிடை சிலேடையணி உள்ளது.

9. ஒரு வங்காளி வசனம்.

வா' என்றார். அந்த அம்மாளுக்கு அப்போது எண்பதுக்கு மேல் வயதாகி விட்டது. அது மட்டுமின்றி, தாயாக உள்ள அவளிடம் எப்படி பீர்பல் இந்தக் கேள்வியைக் கேட்க முடியும்? ஆயினும் இது சக்ரவர்த்தியின் உத்தரவாயிற்றே! பீர்பல் தர்ம சங்கடத்தில் மாட்டிக் கொண்டார். விசாரத்தில் ஊண் உறக்கம் விட்டார். அவருடைய தாயார் மிகுந்த புத்திசாலி—பீர்பலுடைய அம்மாவாக்கும் அவள் என்பது நினைவிருக்கட்டும்—ஆதலால் அவள் எல்லாவற்றையும் ஊகித்துவிட்டாள். பிள்ளையிடம், 'என் மகனே, விசாரப்படாதே. சாப்பிட்டுக் கொஞ்சம் ஓய்வு எடுத்துக்கொள். தர்பாருக்குப் போகும்போது என்னிடமிருந்து மறுமொழி பெற்றுச் செல்' என்றாள். அப்படியே தர்பாருக்குச் செல்லும் சமயத்தில் பீர்பலின் தாய் அவரிடம் 'இருபது பெட்டி' அமைப்பு ஒன்றைக் கொடுத்துச் சக்ரவர்த்தியிடம் தருமாறு சொன்னாள்''[10] சக்ரவர்த்தி பெட்டியைத் திறந்து பார்த்தார். ஒன்றுக்குள் ஒன்றாகப் பல பெட்டிகள் இருக்கக் கண்டார். அத்தனையும் காலியாக இருந்தன. கடைசியில், எல்லாவற்றிற்கும் உள்ளே இருந்த பெட்டியிலேயே சிறிதளவு சாம்பலைக் கண்டார். மறுமொழியின் உள்ளர்த்தம் தெளிவானது!

நாக்கையும் காம உணர்ச்சியையும் வென்றுவிட்டால் எல்லாத் தொந்தரவுகளும் தீர்ந்து போகின்றன.

ஸ்ரீசைதன்யர் கேசவ பாரதியிடம் சன்னியாச தீக்ஷை பெறுவதற்காகச் சென்றபோது பின்னவர், 'நீ இளமையின் மலர்ச்சியில் இருக்கிறாய், ஈடிணையில்லா அழகாகவும் இருக்கிறாய். உனக்குத் துறவுத் தீக்ஷை தர எவர்தான் துணிவர்?' என்றார். அதற்கு ஸ்ரீசைதன்யர், 'ஐயா, ஒரு சாதகருக்குத் துறவு தருமுன் அவரைப் பரிக்ஷித்துப் பார்ப்பது தங்கள் பழக்கம். எனக்கு யோக்கியதை இருப்பதாகக் காண்பீர்களாயின், தாமாகவே எனக்கும் தீக்ஷை வழங்க மனம் கொள்வீர்கள். ஆகையால் என்னைப் பரிக்ஷித்துப் பார்த்து, எனக்குத் தகுதி உண்டா என்று தெரிந்து கொள்ளுங்கள்' என்றார். 'நாக்கை நீட்டு' என்றார் பாரதி. சீடர் அவ்விதமே நீட்ட, குரு அதில் கொஞ்சம் சர்க்கரையை வைத்தார். அந்தச் சர்க்கரை பாட்டுக்கு (நாக்கில்) வைத்தது வைத்தபடியே இருந்தது. (ஸ்ரீசைதன்யருக்குச் சர்க்கரை வைத்தும் உமிழ்நீர் சுரக்காததால்) அது கொஞ்சமும் ஈரமாகக்கூடவில்லை. பிறகு அதை ஊதியவுடன் (நாக்கில் ஒரு துகள்கூட ஒட்டிக்கொள்ளாமல்) அவ்வளவும் காற்றில் சிதறி விழுந்தது. இதன்பின் பாலுணர்ச்சியைப் பரிசோதிக்க வேண்டிய அவசியமே இருக்கவில்லை.

**தாவஜ்-ஜிதேந்த்ரியோ ந ஸ்யாத் விஜிதாந்**
**யேந்த்ரிய : புமாந் |**
**ந ஜயேத் ரஸநம் யாவஜ் ஜிதம் ஸர்வம் ஜிதே**
**ரஸே ||** [11]

'நாக்குத் தவிர மீதமெல்லாப் புலன்களையும் ஒருவன் அடக்கினாலும் ஜிதேந்திரியன் எனக் கருதுவதற்கில்லை. நாக்கின் சுவைத்தேட்டம் அடக்கப்பட்டால், அப்போதுதான் மற்ற எல்லாமும் அடக்கப்பட்டதாகும்.'

நாவைக் கட்டுப்படுத்தினால் பால் உந்தலும் கட்டுப்படுத்தப்பெறும் புலன்கள் கட்டுப்பாட்டில் கொணரப்பட்டாலன்றி ஆன்மிக முன்னேற்றம் ஏற்பட முடியாது கீதையின் நெடுகிலும் திரும்பத் திரும்ப இதுவே எடுத்துரைக்கப்பட்டிருக்கிறது: 'ஓ பாரதரேறே! ஆகையால் நீ இந்தப் புலன்களை முதலில் கட்டு; அதன் வழி இந்தப் பாபகரமான காமத்தின் போக்கைக் கொல்லு; காமத்தில் மனம் போவதே ஒருவனது ஞானத்தையும் ஸாக்ஷாத்காரத்தையும் அழிப்பதாகும்.'

ஒரே ஒரு புலன் கட்டுப்படுத்தப்பெறுவிட்டாலும் ஒருத்தர் செய்யும் விரதாநுஷ்டானங்களும் மற்ற எல்லா ஆன்மிக சாதனைகளும் வீணாகிவிடுகின்றன. ஒரு குடத்தில் ஒரே ஒரு துளை இருந்தாலும் நீர் முழுவதும் அதன் வழியே ஒழுகிப்போய்விடுவது போல. தன் நிலத்துக்கு நீர் பாய்ச்சிய உழவனைப் பற்றி ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்லும் நீதிக் கதை உங்களுக்குத் தெரியுமே! அந்த நிலத்தில் இருந்த ஓர் அடிவாரத் துவாரத்தின் வழியாக எல்லா ஜலமும் வெளியேறிற்றாம்! ஒரு சொட்டு ஜலம்கூட நிலத்துக்குப் பாயவில்லையாம்!

**இந்த்ரியாணாம் ஹி ஸர்வேஷாம் யத்யேகம்**
**க்ஷரதீந்த்ரியம் |**
**ததஸ்ய க்ஷரதி ப்ரஜ்ஞாம் த்ருதே:பாத்ராதி**
**வோதகம் |**

10. 'இருபது பெட்டி' என்பது ஒரு விளையாட்டுச் சாமான். ஒன்றுக்குள் ஒன்றை வைத்து மூடியதாக அதில் இருபது பெட்டிகள் இருக்கும். மிகவும் உள்ளேயிருக்கும் பெட்டி பட்டாணி அளவே சிறிதாக இருப்பதும் உண்டு. காசியில் இது நிறையக் கிடைக்கும்.

11. பாகவதம் : 11-8 21.

'ஒரே ஓர் இந்திரியம் சஞ்சரிப்பதற்கு அனுமதிக்கப்பட்டாலும், அது மட்டுமே சாதகனின் ஞானப் பிரகாசத்தை அழித்துவிடுகிறது—விரிசல் கண்ட ஜாடியிலிருந்து ஜலம் வெளிப்போவது போல'[12]

**ரஸோப்யஸ்ய பரம் த்ருஷ்ட்வா நிவர்த்ததே.**

'புலன் விஷயங்களின் சுவையை [நேராக அனுபவிப்பது மட்டுமின்றி, அதை] இச்சிக்கும் வேட்கையும்கூட ஈச்வரானுபவம் கிட்டியவுடன் விலகி விடுகிறது.' (—பகவத்கீதை 2·59)

புலனடக்கத்தை பலாத்கார முயற்சியால் ஏற்படுத்தக்கூடாது. இறைவனை சாட்சாத்கரிப்பதால் மாத்திரமே அது பூர்த்தியாகச் சாதிக்கப்படுகிறது. ஆனால் ஆரம்பத்தில் ஒருவன் இந்த லட்சியத்துக்காகப் போராடத்தான் வேண்டும். பிறகு அது மிகவும் இயற்கையாக ஆகிவிடும். அறிவாளியான வேடன் மானைப் பிடித்தபின் கட்டி வைப்பது போல, புலன்களை அடக்குவதில் வெற்றி பெற்றபின் ஒருவன் விழிப்போடிருந்து, மனதையும் இந்திரியங்களையும் கட்டுப்பாட்டில் நீடித்து நிலைநிறுத்த வேண்டும்.

• • •

(புதிதாக வந்த இளைஞரைச் சுட்டிக்காட்டி) இவர் ஆன்மிக சாதனைகளைப் பயிலும் வாலிபராகக் காணப்படுகிறார். நீங்கள் எல்லோரும் இதைக் கண்டறிய முடியவில்லையா? நான் இதை மிகவும் தெளிவாகக் காண்கிறேன். மனம் (ஆடாமல்) ஸ்திரமாக இருக்கிறதா என்று பரீட்சிப்பதற்குப் பார்வை (சஞ்சரிக்காமல்) ஸ்திரமாக இருப்பது ஓர் அறிகுறியாகும். மனம் ஸ்திரமாகத் தொடங்கியவுடனே பார்வையும் ஸ்திரமாகத் தொடங்குகிறது. அதன்பின் ஒருவனது பார்வையிலும் சலனங்களிலும் எவ்விதமான தடுமாற்றமும் இருப்பதில்லை.

(இளைஞரை நோக்கிப் புன்சிரிப்புடன்) உனக்கு என்ன வேண்டும்? நீ (அற்புத சித்திகளான) சக்திகளை வேண்டவில்லை என்று நம்புகிறேன், சரிதானே?

(மற்றவர்களிடம்) முடிவு நல்லபடியாக அமைகிற எல்லாமே நல்லதுதான். முடிவுவரையில் வழுவாமலிருப்பது என்பது மிகவும் கடினம். ஆத்ம சாதகனுக்குச் சில சமயங்களில் தாமாகவே (அற்புதச்) சக்திகள் வந்து சேர்கின்றன. ஆனாலும் அவற்றை அவன் பெரிதாகப் பொருட்படுத்தத் தொடங்கிய கணமே அவன் அழிவுபடுகிறான்—அவனது முன்னேற்றம் தடைப்படுகிறது. மேலும், இந்தச் சக்திகள் நிரந்தரமாக இருப்பதில்லை. சுய நலனுக்காக இந்தச் சக்திகளை உபயோகித்துக்கொள்வது பற்றி சொல்ல வேண்டியதில்லை; பர நலனுக்காக இவற்றை உபயோகிப்பதிலும்கூட இவை செலவாகி, இழப்பதாகவே முடியும். கடலிலுள்ள ரத்தினங்களைத் தேடி ஒருவன் வீட்டிலிருந்து கிளம்பினான். கடற்கரைக்கு வந்ததும் அவன் பல வண்ணங்கள் கொண்ட கூழாங்கற்களும், கிளிஞ்சல்களும் அங்கே சிதறிக் கிடக்கக் கண்டு, அவற்றைத் தன் ஜேபிகளில் நிரப்பிக் கொள்வதில் இறங்கிவிட்டான்—கடலுக்குள் உள்ள ரத்தினங்களை அறவே மறந்து விட்டான். திவ்ய மாதா அனைவரையும் மயக்கி, லட்சியத்தை மறந்து விடும்படி செய்கிறாள். கடோபநிஷத்தில் யமன் நசிகேதனுக்குச் சொல்கிறான்:

'ஹே நசிகேதனே! இந்த ஆரணங்குகளும், ரதங்களும், கீத வாத்தியங்களும் மானுடருக்கு ஒருகாலும் கிட்டவொண்ணாதவை. அவற்றை உனக்கு அளிக்கிறேன். அவற்றை உபயோகப்படுத்திக் கொள். ஆனால், மரணத்திற்குப் பின் என்ன நேர்கிறது என்பதைப் பற்றி (மாத்திரம்) என்னிடம் கேட்காதே!'

இதற்கு நசிகேதன் கூறிய மறுமொழியைப் பாருங்கள்: 'ஹே காலனே! (நீ அளிக்கும்) இவையெல்லாம் தாற்காலிகமானவையே; அவை மானுடரின் இந்திரியபலத்தை நலிவு செய்வனவே. வெகு நீண்ட ஆயுள் என்பதும் குறுகியதே. எனவே இந்த ரதங்களும், கீதமும், மற்றவையும் உன்னிடமே இருக்கட்டும். மனிதன் செல்வத்தால் நிறைவு எய்துபவன் அல்லன். உன்னைச் சந்தித்தவுடன் எங்களுக்குச் செல்வம் கிட்டிவிடும். உன் அருள் உள்ளவரையில் எங்களது ஆயுளும் பெருகும். ஆகையால் நான் வேண்டி விரும்புவது (மரணத்துக்குப் பின் என்ன என்றறியும் ஞானமான) அந்த ஒரே வரம்தான்! வேறேதும் அல்ல.'

யமன் நசிகேதனை மயக்க முயல்வது போலவே தான் திவ்யமாதா அனைவரையும் மயக்கிக் கொண்டிருக்கிறாள். இந்த (ஸித்துச்) சக்திகளில் என்ன இருக்கிறது? 'சலவைத் தொழிலாளி போல பிறருடைய சரக்குகளில் ஒருவன் கர்வப்படுவதுதான் இது' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவது வழக்கம். இவை (அற்புதச் சித்திகள்) உங்களுக்கு என்ன பொருட்டு? இவை யாவும் இறைவனுக்கே உடைமை

12. மநு, 2·99.

யாவன. உங்கள் மூலமாக அவற்றை அவன் செலுத்துகிறான்; அவ்வளவே. ஒரு யானையைக் கொன்று மறுபடி உயிர்ப்பித்ததாக ஸ்ரீராமகிருஷ்ணர் கூறிய நீதிக்கதை போன்றதே இது[13].

(இளைஞரைப்பார்த்து) கூடாது, கூடாது, ஒருவனுக்கு இந்த வழியில் (சித்திகளைக் குறித்து) மனம் சாயக் கூடாது. நாம் வேண்டுவது பக்தி. ஒருவனுக்குப் பக்தி இருந்துவிட்டால் வேறென்ன தேவை உண்டு? ஒரு சமயம் நாரதர் பெரிய தவ விரதங்கள் அப்யஸித்த போது மேலுலகிலிருந்து அவர் பின் வருமாறு ஒரு குரல் கேட்டார்:

**அந்தர் பஹிர் யதி ஹரிஸ் தபஸா தத: கிம் |**
**நாந்தர் பஹிர் யதி ஹரிஸ் தபஸா தத: கிம் ||**

13. ஆத்மசாதகனொருவன் சில அப்ராகிருதமான சக்திகளை ஈட்டிக்கொண்டான். அதனால் கர்வம் அடைந்தான். ஆயினும் அவன் உள்ள உண்மை உள்ளவன். எனவே இறைவன் அவனிடம் ஒரு பிராம்மணனின் வடிவத்தில் வந்தான். சாதகனின் சக்திகளைப் புகழ்ந்துவிட்டு, அதைப் பரிசோதித்து அறிய விரும்புவதாகச் சொன்னான். அப்போது ஒரு யானை பக்கத்தில் போய்க்கொண்டிருந்தது. பிராம்மணனின் கோரிக்கையில் பெருத்த திருப்தி கொண்ட சாதகன் சிறிது தூசியை எடுத்து, சில மந்திரங்களைக் கூறியவாறு அந்த யானைமீது எறிந்தான். உடனே யானை செத்துவிட்டது. சாதகனால் அதை உயிர்ப்பிக்க முடியுமா என்றறியப் பிராம்மணன் விரும்பினான். முன்சொன்ன விதத்திலேயே இதையும் சாதகன் செய்துகாட்டினான். இதை யெல்லாம் பார்த்தபின் பிராம்மணன், "நல்லது ஐயா, யானை செத்தது, பிறகு உயிர்கொண்டது. ஆனால் இந்த சக்தியினால் உங்களுக்கு ஏற்பட்ட ஆன்மிக லாபம் என்ன?" என்று கேட்டான். கேட்டவண்ணமே இறைவன் மறைந்து விட்டான். சாதகனும் பாடம்பெற்று நல்லறிவு அடைந்தான்.

"இறைவன் எக்காலும் உள்ளும் புறமும் இருப்பவனாகில், அப்போது நீ விரதாநுஷ்டானம் செய்ய வேண்டிய நோக்கம் ஏது? இறைவன் உள்ளோ புறமோ இல்லாவிட்டாலோ, இந்த விரதாநுஷ்டானங்களால் என்ன பயன்?" இதையே வேறு வார்த்தைகளில் சொல்வதானால், இப்படிப்பட்ட சாதனைகளை நாம் இறைவனிடம் நம்மை ஒப்புவித்துக் கொண்டே செய்யவேண்டும். (இறைவனை மறந்து சக்திகள் பெற மட்டும் தவ விரத சாதனைகள் கூடாது.) ஆனால் தற்போது நம் தேசத்தில் விரதாநுஷ்டானங்களுக்கு வருந்தத்தக்க நலிவு ஏற்பட்டிருக்கிறது. முன்னாளில் போல இப்போது கடும் நியம அநுஷ்டானம் பற்றி நாம் கேட்க முடிவதில்லை. நல்லது, இது ஜீரணிக்கப்படாத வேதாந்தத்தின் விளைவாகும். நியம அநுஷ்டானங்களின்றி வேதாந்த உண்மைகளைப் புரிந்து கொள்வது எங்கேனும் கூடுமா? 'விசாரஸாகரம்'?[14] என்பது தற்காலத்தில் அதன் தலைப்புப் பொருளையே இழந்து விட்டது. போலி வேதாந்தம் தேசத்தைக் கெடுத்து விட்டது. எல்லாரும் பேச்சில் மட்டும் பெரிதாகச் சொல்கிறார்கள்—'அவன் ஒருவன் இருக்கிறான்', 'பிரபஞ்சம் என்பது இறந்த-நிகழ்-எதிர் காலங்கள் எதிலுமே இல்லை' என்றெல்லாம்! பிதற்றல்! இப்படியெல்லாம் சொல்வதன் அர்த்தத்தை அவர்கள் அறிவார்களா? விரதம், நியமம் முதலியவைகளாலன்றி வேதாந்தத்தைப் புரிந்துகொள்ள முடியாது.

---

14. 'விசாரஸாகரம்' என்பது அத்வைத வேதாந்தம் பற்றி நிச்சலதாஸ் எழுதிய ஹிந்திச் செய்யுட்களாலான தத்துவ நூல். சாதுக்களால் வெகுவாகப் படிக்கப்பெறுவது. ஆனால் அவர்களில் பெரும்பாலோர் அதன் உபதேசங்களை நடைமுறையில் கேலிக்கூத்தாக்குவதாகக் கருதியே சுவாமி துரியானந்தர் இவ்விதம் கூறுகிறார்.



பசியால் நலிந்தோரைப் பார்த்து அவர்களுக்கு உதவி செய். நல்லறங்களைச் செய்.

—பட்டினத்தார்

உடல், வாய், மனம், பணம் என்னும் நான்கு வகைகளிலும் பாவம் செய்கிறோம். பாவத்திற்குப் பிராயச்சித்தமாக அந்த நான்காலுமே புண்ணியம் செய்யவேண்டும். உடலால் பரோபகாரம், வாயால் பகவந்நாமாவைச் சொல்வது, மனதால் தியானம், பணத்தால் தர்மம் முதலியவை செய்யவேண்டும்.

—ஸ்ரீகாஞ்சிப் பெரியவர்

# விவேகானந்த அஞ்சலி

சிலம்புச்செல்வர் ம. பொ. சிவஞானம்

23-2-80-ஆம் நாள் மயிலை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் ஆற்றிய உரை, கட்டுரை வடிவில் இங்கு இடம் பெறுகிறது.

இந்தியாவின் தெய்வபக்திக்கும் தேசபக்திக்கும் எடுத்துக்காட்டாகத் தோன்றிய மகான் விவேகானந்தர். இந்தியாவின் தெய்வபக்தியிலும் தேசபக்தியிலும் மறுமலர்ச்சி கண்ட ஒப்பற்ற மாமனிதர் விவேகானந்தர். ஒவ்வொரு ஹிந்துவின் நியாயமான வணக்கத்திற்கும் வழிபாட்டுக்கும் உரிய உத்தம ஹிந்து சன்னியாசி விவேகானந்தர். அத்தகைய அருளாளரைப் பற்றிப் பேச வாய்ப்புக் கிடைத்ததில் எல்லையற்ற மகிழ்ச்சியை நான் உண்மையாகவே கொண்டிருக்கிறேன்.

ஸ்ரீராமகிருஷ்ண மடத்திற்கு நான் புதிதானவன் அல்ல. ஏற்கனவே பல முறை நான் இதே மயிலை இராமகிருஷ்ண மடத்திற்கு வந்திருக்கிறேன். கோயம்புத்தூர் ஸ்ரீராமகிருஷ்ண வித்யாலயாவிலும், காஞ்சிபுரத்திலுள்ள ஸ்ரீராமகிருஷ்ண மடத்திலும் பேசியிருக்கிறேன்.

சுவாமி விவேகானந்தரைப் பற்றிய பொதுக் கூட்டம் என்றவுடன் எனக்குப் பழைய நிகழ்ச்சி ஒன்று நினைவுக்கு வருகிறது. இங்கு மயிலாப்பூரில் சுவாமி விவேகானந்தரின் நூற்றாண்டு விழா நடைபெற்றது. அந்த விழாவில் அப்போது சர் சி. பி. ராமசாமி ஐயர், கே. பாலசுப்பிரமணிய ஐயர், மத்திய அமைச்சராக இருந்த மொரார்ஜி தேசாய், தமிழில் பேச நான் (ம. பொ. சி.) என்று நாங்கள் நால்வரும் கலந்துகொண்டோம். எதிரிலுள்ள உயர்நிலைப் பள்ளியின் மைதானத்தில்தான் பிரம்மாண்டமான அந்தப் பொதுக்கூட்டம் நடந்தது. அப்போது விவேகானந்த ஜயந்திக்குக் கூடிய பொதுக்கூட்டத்தைப் போன்று திரளான பெருங்கூட்டம் இந்த மயிலாப்பூரில் வேறு எதற்குமே கூடியதில்லை.

இந்த நிகழ்ச்சியில் கலந்துகொள்வதற்கு எனக்குத் தகுதி உண்டு என்று உங்களை நம்ப வைப்பதற்காகச் சற்று முன்பு, பத்மஸ்ரீ பட்டம் பெற்றவன் என்றும், டாக்டர் பட்டம் பெற்றவன் என்றும், மத ஈடுபாடு கொண்ட அரசியல்வாதி என்றும் வரவேற்புரையில் என்னைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். நான் அவர்கள் சொன்னதை மறுக்கவில்லை; அவ்விதம் அவர்கள் சொன்னவற்றுக்கு என் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

'தெய்வ நம்பிக்கை கொண்ட அரசியல்வாதி' என்று சொன்னார்களே, அதுதான் இங்கே பேசுவதற்கு எனக்குள்ள தகுதி என்று நான் நினைக்கிறேன். ஏனென்றால் டாக்டர் பட்டமும் பத்மஸ்ரீ பட்டமும் பெற்ற அரசியல்வாதிகள் பல பேர் இருக்கிறார்கள். அரசியல்வாதிகளுக்கே தெய்வபக்தி குறைவு; அதிலும் இன்னும்சொல்லப்போனால் தமிழ்நாட்டு அரசியல்வாதிகளிடையே தெய்வ நம்பிக்கை இருப்பது மிகவும் அரிது. அற்ப அளவிற்காகிலும் தெய்வ நம்பிக்கை கொண்டிருக்கிறேன் என்பதுதான் சுவாமி விவேகானந்தரைப் பற்றிப் பேச எனக்குள்ள ஒரே தகுதியாக நான் கருதுகிறேன்.

இங்கு குழுமியுள்ள இந்த அவை பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரைப்பற்றியும் சுவாமி விவேகானந்தரைப் பற்றியும் நன்கு அறிந்த பெரியோர்களைக் கொண்டிருக்கிறது. எனவே நான் சொல்லித்தான் அந்தத் தெய்வபுருஷர்களைப் பற்றி நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற நிலையில் இல்லை என்பதைத் தெளிவாகவே நான் உணர்ந்திருக்கிறேன். எனினும் சுவாமி விவேகானந்தரைப் பற்றிய ஒரு சில கருத்துக்களை எனது அஞ்சலியாக அந்த மகானுக்கு உங்கள்முன் சமர்ப்பித்துக் கொள்கிறேன்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரும் சுவாமி விவேகானந்தரும் காலம் நமக்குக் கொடுத்த சக்திகள் ஆவர். இந்த இரண்டு மகாபுருஷர்களும் காலம் நமக்குக் கொடுத்த சக்திகள் என்று மீண்டும் மீண்டும் சொல்வதற்கு நான் என்றுமே, எந்த இடத்திலுமே சலித்துக் கொண்டது கிடையாது என்பதை என்னுடன் பழகிய அன்பர்கள் எல்லோரும் அறிவார்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணரும் விவேகானந்தரும் காலத்தின் தேவையை நிறைவு செய்வதற்காகவே அவதரித்த அருளாளர்கள் ஆவர். ஒரு நூற்றாண்டுக்கு முன்பு பாரதம் இருந்த நிலையில் ஆண்டவனால் அனுப்பட்டவர்களே அவர்கள்.

அந்நிய மதத்தவர்களான இஸ்லாமியரின் ஆட்சி முடிந்து, அந்நிய ஏகாத்திபத்தியமான கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சி இந்தியாவில் நடைபெற்றுக் கொண்டிருந்த நேரம் அது. அப்போது இந்திய மக்கள் தமது சொந்த மதத்தைப் புறக்கணிக்க முற்பட்டார்கள்; தமது சொந்த மதத்தையும் தமக்கே உரிய இலக்கியப் பாரம்பரியத்தையும் தாழ்வாகக் கருத முற்பட்டார்கள்; நமது ஆன்மிகப் பாரம்பரியத்தின் மீது நாம் கொண்டிருந்த நம்பிக்கைகளெல்லாம் தகர்ந்து தவிடுபொடி ஆகிக்கொண்டிருந்த நேரம் அது; இந்திய மக்கள் மேலைநாட்டினரைத் தேவர்கள்போல் எண்ணியும் தங்களைத் தாங்களே தாழ்வாக எண்ணவும் கூடிய நிலையில் தான் அன்று இருந்தார்கள். இந்த மயக்கங்களிலிருந்து நம்மை விடுவிக்க அவதரித்த அவதார

புருஷர்களே ஸ்ரீராமகிருஷ்ணரும் சுவாமி விவேகானந்தரும் என்பதில் ஒருசிறிதும் ஐயத்திற்கே இடமில்லை.

அந்த நாளில் முச்சந்திகள் தோறும் கிறிஸ்தவப் பாதரிமார்கள் நின்றுகொண்டு, "ஏ பாவிகளே! ஏ அஞ்ஞானிகளே!" என்று இந்துக்களை அழைத்து மதப் பிரசாரம் நடத்திக்கொண்டிருந்தார்கள்; இப்போதும் அவ்விதம் நடத்துகிறார்கள்; ஆனால் இது அந்நாளில் இப்போதையும்விட மிகவும் அதிகமான அளவில் நடந்துகொண்டிருந்தது. அத்தகைய அவலச் சூழ்நிலையில்தான், "மனிதன் பாவி அல்ல, அவன் தெய்வத்தன்மை பொருந்தியவன்; நாம் அஞ்ஞானிகள் அல்ல; ஞானிகளின் பரம்பரையைச் சேர்ந்தவர்கள்" என்பதை ஸ்ரீராமகிருஷ்ணரும் விவேகானந்தரும் தோன்றித் தங்கள் வாழ்வாலும் வாக்குகளாலும் நம்மை உணரும்படிச் செய்தார்கள்.



இந்து மதத்தைக் கிறிஸ்தவர்களிடமிருந்து காத்தவர் விவேகானந்தர். இந்துமதத்தை ஒப்புக்கொள்ளாதவர்களாகவும் மேலைநாட்டு மோகம் பிடித்தவர்களாகவும் இருந்தவர்களிடமிருந்து இந்து மதத்தைக் காத்தவரும் அவர்தான். இந்துமதத்தின் உபநிஷத வேதாந்த இதிகாச புராண உண்மைகளையெல்லாம் நியாயமான முறையில் அவர் காப்பாற்றினார். இந்துமதத்தை ஒப்புக்கொள்ள மறுத்தவர்களிடமிருந்து மட்டும் அவர் இந்துமதத்தைக் காப்பாற்றவில்லை; இந்துமதத்தை ஒப்புக்கொண்டும் கால மாறுதல்களை உணராமல் கிணற்றுத் தவளையாக இருந்த இந்துக்களிடமிருந்தும் அவர் இந்து மதத்தைக் காப்பாற்றியிருக்கிறார்.

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் யோகிகளுக்கெல்லாம் யோகி என்று சொல்லத்தக்க வகையில் ஆன்மிக உச்சாணியில் நிலைபெற்றிருந்தார். அன்று அவருக்கென்று ஓர் இயக்கம் இல்லாவிட்டாலும், தனியொரு மனிதராகிய அவரே ஓர் இயக்கமாக, ஓர் இயக்கத்திற்கு உரிய வலிமையைப் பெற்றிருந்தார். பின்னர் அவரிடமிருந்தே ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த புனித இயக்கம் தோன்றுகிறது. இன்று உயர்ந்து நிற்கும் இந்த இயக்கத்திற்கு, இன்னும் மேலும் மேலும் வானுயர்ந்து நிற்கப் போகும் இந்தப் பேரியக்கத்திற்கு அன்றும் இன்றும் என்றும் அடித்தளமாக இருப்பவர் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர்தாம் என்பது முக்காலும் உண்மையாகும்.

"வேதாந்தம் சிலருக்கு மட்டும்தான் உரியது; அதிலும் சம்ஸ்கிருதம் படித்தவர்களுக்கு மட்டும் தான் உரியது; ஒரு ஜாதிக்காரர்களுக்கு மட்டும் தான் வேதாந்தம் சொந்தமானது; சாதாரண மக்கள் வேதாந்தத்தை நினைத்தும் பார்க்கக்கூடாது; அதன் அருகில் செல்லவும் சாதாரண மனிதனுக்கு அருகதை கிடையாது" என்று இருந்த சூழ்நிலையை மாற்றி, வேதாந்தத்தை மக்கள் எல்லோருக்கும் உரிய பொதுச் சொத்தாகச் செய்தவர் விவேகானந்தர். வேதாந்தத்தை இந்த மண்ணில் பொதுவுடைமை ஆக்கிய முதல் ஹிந்து துறவி விவேகானந்தர்தாம் என்பதை வரலாற்றில் நாம் பார்க்கிறோம்.

"வேதாந்தம் படிக்க வேண்டுமானால் உனக்கு இன்ன இன்ன தகுதிகள் இருக்கவேண்டும்; சன்னியாசம் ஏற்க வேண்டுமானால் நீ இன்ன ஜாதியில் தான் பிறந்திருக்கவேண்டும்" என்றெல்லாம் இருந்த நிலையைத் தலைகீழாக மாற்றி, "விருப்பம் உள்ளவர் எவராயினும் வேதாந்தம் படிக்கலாம்; விருப்பம் உள்ளவர் எவராயினும் துறவு ஏற்கலாம்; இவற்றுக்கு ஒரு குலத்தில் பிறப்பதும் பிறவாமல் இருப்பதும் சாதகமாகவோ பாதகமாகவோ இல்லை" என்பதைச் செயலில் காட்டிய செயல் வீரராகவும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் மாபெரும் பிரசாரப் பீரங்கியாகவும் விவேகானந்தர் திகழ்ந்தார்.

"பட்டினியால் வருந்துபவனுக்குக் கடவுள் ரொட்டி வடிவத்தில்தான் வரவேண்டும்" என்று மகாத்மா காந்தியடிகள் குறிப்பிட்டார். அவர் அவ்விதம் சொல்லுவதற்குப் பல ஆண்டுகள் முன்னதாகவே, "பசியாக இருப்பவனிடம் சென்று மதத்தைப் போதிக்காதே. பசித்தவனிடம் சென்று மதப் பிரசாரம் செய்வது பாவச் செயல்" என்று சொல்லி, மதத்தில் சேவை மனப்பான்மையை விவேகானந்தர் வளரச் செய்திருப்பதை நாம் பார்க்கிறோம். "பட்டினியால் இந்த நாட்டில் ஒரே ஒரு நாய் வாடினாலும் அதற்கு உணவிடுவதுதான் சிறந்த பணி" என்றார் விவேகானந்தர். அவருக்குப் பிறகு, சகோதரி நிவேதிதையின் சீடராகி விவேகானந்தரின் பரம்பரையில் வந்த மகாகவி பாரதி

அருள்நெறிக் கதை:

# தர்மபுத்திரர் ஏன் நரகம் சென்றூர்?

நரேந்திரன்

தர்மத்தின் திருவுருவமாக விளங்கிய தர்மபுத்திர ருக்கும், தானத்தில் சிறந்து விளங்கிய கர்ணனுக் கும் ஈடாக உலகம் இதுவரையில் எவரையும் கண்டதில்லை. அப்படிப்பட்ட தர்மபுத்திரரே ஒரு தடவை நரகத்திற்குச் செல்லும்படி ஆயிற்று!

மகாபாரதப் போர் மிகவும் தீவிரமாக நடை பெற்றுக் கொண்டிருந்தது. ஆசாரியர் துரோணர் பாண்டவர்களின் படையைச் சின்னபின்னப்படுத் திக் கொண்டிருந்தார். சிறந்த அஸ்திரங்களைப் பல தடவை பிரயோகித்தார். பாண்டவர்களைச் சேர்ந்த வீரர்கள் எவரேனும் அவர்முன் காணப் பட்டால் உடனே அவர்கள் இந்த உலக வாழ்வை முடித்துக்கொண்டார்கள். பாண்டவர்சேனை குழப் பம் காரணமாகச் சிதறிக் கிடந்தது. மகாரதிகள் எனப்பட்ட சிறந்த படைத்தலைவர்கள்கூட என்ன செய்வது என்ற சிந்தனையில் மூழ்கினர்.

துரோணர் தமது கையில் அஸ்திரங்களை வைத்துக்கொண்டு, அவரே அவற்றைப் பிரயோகம் செய்யும் வரையில் அவரை யாராலும் வெல்ல முடியாது. எனவே அவராக முன்வந்து அஸ்திரங் களைக் கீழே வைத்தாலன்றி அவரை வெல்லுவது என்பது, முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப் படுவதைப் போன்றதாகும். இதை நினைத்தே அனைவரும் கலங்கினூர்கள்.

அப்போது பாண்டவர்களின் துயர் துடைப் பதற்கே உருவெடுத்த கண்ணபிரான், அவர்களைத் தேற்றும் வகையில் ஒரு விஷயத்தை அவர்களுக் குக் கூறினூர்—''யுத்தம் ஆரம்பிக்கும்போது துரோணர் கூறியதை நீங்கள் அனைவரும் மறந்து விட்டீர்களா? 'மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திர மான யாராவது ஒருவர், ஏதாவது விரும்பத் தகாத ஒரு விஷயத்தைச் சொல்லக் கேட்டால், அப்போது நான் என் கையிலுள்ள அஸ்திரங்களைத் தூர எறிந்துவிட்டுத் தியானத்தில் ஆழ்ந்து விடுவேன்' என்று துரோணர் கூறியிருக்கிறூர்'' என்று கண்ணபிரான் சொல்லி, பாண்டவருக்கு நினைவூட்டி, ஏதாவது ஒரு வழியைக் காணச் சொன்னூர்.

கண்ணன் சொன்னதைக் கேட்டவுடனே எல்லோரும் மீண்டும் சிந்தனையில் ஆழ்ந்தனர். கடைசியாகப் பீமசேனனுக்கு ஒரு யோசனை தோன்றியது. அதன்படி பீமன் துரோணரின் மகன் அசுவத்தாமாவுடன் போரிடக் கிளம்பினூன். சண்டையின் நடுவில் பீமன் கீழே குதித்தான். குதித்த அவன், நேரே அசுவத்தாமனின் தேருக்கு அடியில் தன் கதையைக் கொடுத்து ஒரு நெம்பு நெம்பினூன். அவ்வளவுதான்! அசுவத்தாமா ரதத்தோடுகூட யுத்தக்களத்திலிருந்து வெகு தூரம் சென்று எங்கோ போய் விழுந்தான்.

உடனேயே பீமன் கௌரவர்களின் சேனையில் 'அசுவத்தாமா' என்ற பெயருடைய ஒரு யானையை ஒரே அடியில் கொன்று போட்டான். யானை இறந்த வுடன் அவன் நேராகத் துரோணர் இருக்கும் இடத் திற்குச் சென்று, ''அசுவத்தாமன் கொல்லப் பட்டான்! அசுவத்தாமன் கொல்லப்பட்டான்!'' என்று உரத்த குரலில் கூச்சல் போட்டான்.

துரோணரின் காதில் பீமன் போட்ட சப்தம் விழுந்தது. அவர் திடுக்கிட்டார். என்றூலும் அவர் பீமனின் வார்த்தையை நம்பத் தயாராக இல்லை. ஆகவே அவர் உண்மையைத் தெரிந்து கொள்வதற்காகத் தமது ரதத்தைத் தர்மபுத்திரர் இருக்கும் இடத்தை நோக்கிச் செலுத்தினூர்.

துரோணரின் ரதம் நெருங்கி வருவதை மாய கண்ணன் பார்த்தார். யுதிஷ்டிரர் எங்காவது உண்மையைச் சொல்லிக் காரியத்தைக் கெடுத்து

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

யாரும், ''தனியொருவனுக்கு உணவில்லையெனில் ஜகத்தினை அழித்திடுவோம்'' என்று குறிப்பிட்டார்.

சமூகசேவை ஹிந்து மதத்தில் ஓர் அங்கமாக இடம்பெற வேண்டும். சமூகசேவை மதத்தில் காலமெல்லாம் இடம் பெறுமலே இருந்தது என்று நான் சொல்லமாட்டேன். முன்பு இருந்தது; அதை நாம் மறந்திருந்த காலத்தில் நமக்கு நினைவூட்டியவர் விவேகானந்தர். இப்போது விவேகானந்தரின் சேவைபற்றிய கருத்தை எல்லா ஹிந்துக்களுமே ஒப்புக்கொள்கிறூர்கள். இவ்விதம் ஹிந்துக்களின் மத்தியில் சமூக சேவைக்கு ஓர் ஆன்மிக அர்த் தத்தை சுவாமி விவேகானந்தரும் அவர்வழி வந்த இராமகிருஷ்ண மடத்தினரும்தான் எடுத்துக் காட்டியிருக்கிறூர்கள் என்பதை எவரும் மறுக்க முடியாது.

[தொடரும்]

விட்டால் என்ன செய்வது என்று முன் எச்சரிக்கையோடு கண்ணபிரான், "தர்மரே! உங்களைச் சேர்ந்தவர்கள் வெற்றி பெற வேண்டும் என்ருல், இதை விட்டால் வேறு வழி கிடையாது. எனவே துரோணுசாரியார் வந்து கேட்டால், 'அசுவத்தாமன் கொல்லப்பட்டான்' என்று தாங்கள் சொல்லத்தான் வேண்டும். நான் சொல்லுவதால் தாங்கள் இதைக் கூறியே ஆகவேண்டும்" என்று கட்டளை போட்டு விட்டார்.



பாவம், யுதிஷ்டிரருக்குத் தர்மசங்கடமாயிற்று. எந்தக் காரணத்தை முன்னிட்டும் அவர் பொய் சொல்ல விரும்பவில்லை. ஆனுலும் ஸ்ரீகிருஷ்ண பகவானின் வார்த்தையைத் தட்டவும் அவரால் முடியவில்லை. துரோணர் தர்மரின் அருகில் வந்து விட்டார். அவர் தர்மபுத்திரரிடம், "யுதிஷ்டிரா! பீமன் சொல்வது உண்மைதானு?" என்று கேட்டும் விட்டார். தர்மர் மிகவும் சங்கடத்துடன், "அசுவத்தாமன் கொல்லப்பட்டான்!" என்ருர். இதைத் தவிர வேறு பொய் அவர் வாயிலிருந்து வந்ததே இல்லை.

தர்மபுத்திரர் அத்தோடு நிறுத்தவில்லை. அவர் மனச்சாட்சி உறுத்திப் படாதபாடு படுத்தியது. அவர் வாயிலிருந்து மேலும் "மனிதனு, யானையா?" என்ற வார்த்தைகள் வெளிவந்தன. ஆனுல் இந்த வார்த்தைகள் அவர் வாயிலிருந்து வருவதற்கு முன்பாகவே, அதாவது 'அசுவத்தாமன் கொல்லப் பட்டான்!' என்ற வார்த்தை வந்தவுடனே, ஸ்ரீகிருஷ்ண பகவான் ஒரு விநாடியும் தாமதிக்காமல் தமது பாஞ்சஜன்யம் என்ற சங்கைப் பலமாக ஊதி மீதி வார்த்தைகள் துரோணரின் காதில் விழாமல் தடுத்து விட்டார்!

துரோணர் தர்மபுத்திரரின்மீது வைத்திருந்த மகத்தான நம்பிக்கை காரணமாகத் தமது மகன் அசுவத்தாமன்தான் கொல்லப்பட்டான் என்று நினைத்து மிகவும் சோகத்துடன் கையிலிருந்த அஸ்திரங்களை விட்டெறிந்து விட்டார்.

சாதாரணமாக யுதிஷ்டிரரின் தேர் பூமியிலிருந்து எப்போதும் நான்கு அங்குல உயரத்தில்தான் இருக்கும். மற்றத் தேர்களைப் போலத் தரையைத் தொடாது. ஆனுல், கபடமாக இந்த ஒரு பொய்யைச் சொன்னுரோ இல்லையோ, அவரது தேரும் மற்றவர்களின் தேரைப் போலவே பூமியைத் தொட்டுக்கொண்டு ஓட ஆரம்பித்தது!

தமது உடலுடன் சொர்க்கம் செல்லக்கூடிய வாய்ப்பைப் பெற்ற தர்மபுத்திரர், அந்த ஒரே ஒரு பொய்யைச் சொன்னதனுல் ஒரு தடவை நரகத்தைக் காண நேர்ந்தது.

* * *

இந்த ஒரு பொய் சொல்வதற்கு அவர் மனம் எவ்வளவு வேதனைப்பட்டிருக்கும் என்பதை எழுதி விளக்க முடியாது. அதைக் கற்பனை செய்துதான் நாம் பார்க்க வேண்டும்.

இந்தப் பாழும் உலக வாழ்க்கை ஆளுனப்பட்ட தர்மபுத்திரரையே பொய் சொல்லும் நிலைக்கு ஆளாக்கி விட்டதே! பிரம்மம் பஞ்சபூதங்களாகிய வலையில் மாட்டிக்கொண்டு கண்ணீர் வடிக்கிறது போலும்! தர்மபுத்திரர் அரசியலில் சொன்ன இந்த ஒரு பொய்க்கு இந்த நிலை ஏற்பட்டது. அப்படியானுல் அண்டப்புளுகுகளுக்கு என்ன பரிசு கிடைக்கும்?

**வாய்மையே** வெல்லும், பொய் அல்ல. ஆசைகள் பூர்த்தி பெற்ற ரிஷிகள் சத்தியத்தின் எல்லைநிலமாகிய இடத்திற்கு (மோட்சத்திற்கு) எந்த மார்க்கத்தில் செல்லுகிருர்களோ, அந்தத் தேவயான மார்க்கம் சத்தியத்தாலேயே பரப்பப் பட்டிருக்கிறது.

—முண்டக உபநிஷதம்

**நூறு** கிணறுகள் ஒரு குளத்துக்குச் சமம். நூறு குளங்கள் ஒரு தர்மத்துக்குச் சமம். நூறு தர்மங்கள் ஓர் உத்தம புத்திரனுக்குச் சமம். நூறு உத்தம புத்திரர்கள் ஓர் உண்மைக்குச் சமமாவர்.

—ஸ்மிருதி

சத்தியம், ஆயிரம் குதிரைகளைப் பலியிட்டு யாகம் செய்வதற்குச் சமமானது. சத்தியம்தான் தலையாய பிரம்மம்.

—ஸ்மிருதி

சத்தியமே ஆத்மாவைப் புனிதப்படுத்த வல்லது. மோட்சத்திற்கு அதுவே ஏணி. சத்தியம்தான் உலகத்தில் தலையாய கடமை.

சத்தியம்தான் மனிதன். எல்லாம் சத்தியத்தையே பொறுத்திருக்கின்றன.

இத்தனை கோடி ஜீவராசிகளை இந்தப் பூமி தாங்கும்படி செய்திருப்பது சத்தியம்தான். சத்தியம் தான் சூரியனை உதிக்க வைக்கிறது; காற்றை அடிக்க வைக்கிறது; ஜலத்தை ஓட வைக்கிறது.

—ஸ்மிருதி

பொய்யை விடப் பெரிய தீமை கிடையாது.

—ஸ்மிருதி

உண்மையைப் பேசு. கோபத்திற்கு இடம் கொடுக்க வேண்டாம் கேட்டபோது உன்னிடமுள்ள கொஞ்சத்திலிருந்தும் கொடு. இந்த மூன்று வழிகளில் மட்டுமே நீங்கள் ஆண்டவன் சந்நிதியை அடைய முடியும்.

—பௌத்தம்

தான் உண்மையே பேசுதல், பிறர் சொல்லும் உண்மைகளை விருப்பத்தோடுகேட்டல் ஆகியவை சரஸ்வதியை வழிபடும் முறையாகும்.

— இந்துமதம்

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு.

—திருக்குறள்

எப்போதும் உண்மை பேசுபவன் கடவுளின் மடியிலேயே இருக்கிறான்.

காரியாலயங்களில் குமாஸ்தா வேலை செய்பவராக இருந்தாலும், வியாபாரிகளாக இருந்தாலும் அவர்களும்கூட உண்மை பேசுவதிலிருந்து தவறுதலாகாது. உண்மையையே பேசுவது கலியுகத்துக்கான தவமாகும்.

மனிதன் சத்தியம் பேசுவதில் தவறக்கூடாது. அந்த விஷயத்தில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். எப்போதும் உண்மையே பேசி வந்தால் கடவுள் சாட்சாத்காரத்தைப் பெறலாம்.

—பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர்

உண்மைக்காக எதையும் துறக்கலாம்; ஆனால் எதற்காகவும் உண்மையைத் துறக்கலாகாது.

—சுவாமி விவேகானந்தர்

*

# செய்திகள்

★ பொள்ளாச்சியிலுள்ள அழகம்மை ஆச்சி பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் 21-3-80-ஆம் நாள் மாலை நான்கு மணிக்கு 'இந்தியப் பண்பாடும் பெண் கல்வியும்' என்ற தலைப்பில் ஸ்ரீமத் சுவாமி தன்மயானந்தர் மாணவியருக்கு உரை நிகழ்த்தினார். அவ்வமயம், பொள்ளாச்சி கே. ராமசுவாமி கவுண்டர் அவர்கள், சென்னை பேசின் பிரிட்ஜ் சாலையில் கட்டப்பட்டு வரும் ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் பிரைமரி பள்ளிக்கு ரூ. 20,000 நன்கொடை வழங்கினார். பொள்ளாச்சி கே. ராமசுவாமி கவுண்டர் அவர்கள் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் ஆழ்ந்த பக்தி கொண்டவர். பல்லாண்டுகளாக ஸ்ரீராமகிருஷ்ண மடங்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ள இவர், மடங்களின் பணிகளுக்குப் பல சமயங்களில் பொருளுதவி செய்துள்ளார்.

★ வடாற்காடு மாவட்டத்தைச் சேர்ந்த அரக்கோணத்தில் 1970-ஆம் ஆண்டு முதற்கொண்டு 'ஸ்ரீராமகிருஷ்ண—விவேகானந்த மன்றம்' என்ற அமைப்பு இயங்கி வருகிறது. அந்த மன்றத்தின் சார்பாக 23.3-80 ஞாயிறன்று அரக்கோணம் கோதண்டராம சுவாமி கோவிலில், சுவாமி கமலாத்மானந்தர் ஒருநாள் அந்தர்யோகம் நடத்தினார்.

பகவானுக்கு நிவேதனம் செய்யாத ஆகாரம் விஷத்துக்குச் சமமானது. எந்த உணவையும் நிவேதனம் செய்த பின்னரே புசிக்க வேண்டும்.

—ஒரு பக்தர்

புகழ்பட வாழுங்கள்; எல்லோருக்கும் நன்மை செய்யுங்கள்; எல்லா மக்களையும் உறவினராகக் கருதி உழையுங்கள். உதவி புரியுங்கள். அதனால் வரும் நன்மையும் புகழும் நீங்கள் இறந்தபின்னும் உங்களுடன் வருவதாகும்.

—பட்டினத்தார்




# ரமண ரமணி

ரா. கணபதி

அம்பிகை ஈசனில் பிரிவறக் கரைந்த கதை பார்த்தோம். பரமஞானிகளும் இப்படி அம்பிகையாகித்தான் பரமாத்மாவில் கலந்திருக்கிறார்கள். இதைத்தான் நாயிகா பாவம், காந்தாஸக்தி, மதுர பாவம் என்றெல்லாம் விசேஷித்துச் சொல்வது.

லௌகிகக் காதலைக் கொண்டு ஆன்மப் பிரேமை உருவகிக்கப்படுகிறது என்பது சரியே அல்ல. இப்படிச் சொல்வது அழுக்கு நீரில் பிரதிபிம்பிக்கும் அழகுருவத்தைப் பார்த்து, அந்தப் பிரதிபிம்பத்திலிருந்தே மூல ரூபம் கல்பிக்கப்படுவதாகச் சொல்கிறதுபோலத்தான். ஜீவாத்மா தன்னை வழித்து விட்டுக்கொண்டு, பரமாத்மாவுக்கு தன்னை வாரித் தந்துகொண்டு, அது தன்னைப் பூரா பூரா உட்புகுந்து நிரப்ப வேண்டும் என்று கொள்கிற மஹா புனித வேட்கையின் மாயாமயத் திரிபுதான் உலகியல் ச்ருங்காரம். அந்தப் பரம பாவன பாவத்திலே தோன்றும் ஒடுக்கம், நாணம், ரஹஸ்யம், ஏன் இனம் தெரியா அச்சம் எல்லாம்தான் பெண்களின் குணங்களாயிருக்கின்றன. அதாவது நாயிகா பாவத்தில் திவ்ய போதை துய்ப்பவன் பெண்ணைப் போல இல்லை; பெண்தான் அவனைப் போலிருக்கிறாள்.

ஆனால் உலகுக்கு இந்த தேஹக் காதலும் பெண்ணும்தான் தெரியுமாதலால் ஸர்வ ஜனப் பிரியனான இறைவன் ஸர்வ ஜனப் பிரியர்களான அந்த நாயிகா பாவ மஹா பக்தர்களை லௌகிக ச்ருங்கார வழியிலேயே நடக்க வைத்து அதன் மொழியிலேயே பேச வைக்கிறான்; பெண்களாகவே நடித்துக் காட்ட வைக்கிறான். பரமஹம்ஸ குருமஹராஜர் ராதாராணியின் மஹா பாவம் எய்தியபோது சேலையுடுத்திக் கொண்டு ஸ்ரீமதியின் ஸ்திரீ உருவிலேயே விளங்கினாரல்லவா?

பக்தியின் ஸாரஸாரத்தில் ஊறியிருந்த பரமஹம்ஸர் மட்டுமல்ல; ரமணரும் கூட இப்படி நாயிகா பாவத்திலே ஆழ்ந்து திளைத்தவர்தான் என்றால் பலருக்கு ஆச்சரியமாயிருக்கலாம். அந்த மஹா எளியவர் ஒளித்து வைத்திருந்த ஆயிரம் ஆச்சரியங்களில் ஒன்றுதான் இது.

ரமணர் என்றாலே, 'God—ஐக் கூடத் தள்ளி விட்டு Self-ஐயே ஆணி அடித்தாற்போலச் சொன்னவர். அதனால்தான் எங்கள் rational mind-க்கும் appeal ஆகிறார்'' என்று சொல்கிறவர்கள் சொன்னாலும்—இதிலே மிகவும் உண்மையே உள்ளது என்றாலும்—இப்படிச் சொன்னவர் பாதி ரமணர்தான். அர்த்தநாரீச்வரர் கதை சொன்ன அவரும் ஓர் அர்த்தநாரீச்வரர்தான் — ஒரு பாதி மேலே சொன்ன ஞான ஆண் மகன்; மறு பாதி, அதுதான் இந்தத் தொடரில் நாம் கண்டு வருகிற, பக்திப் பெண் மகள்.

(இத் தொடரை ஆரம்பிக்கும்போது இதில் குறிப்பாக இன்ன பொருளை விவரிக்க வேண்டுமென்று வகைப்படுத்திக் கொள்ளவில்லை. கங்கையில் எந்த கட்டமும் புனிதம்தான் என்பதுபோல், ரமண பகவான் பற்றின ஸ்மரணம் எப்படிப் பார்த்தாலும் புண்ணியமாகத்தானிருக்கும் என்று கருதி random jottings என்ற ரீதியிலேயே ஆரம்பித்தேன். ஆனால் பரமஹம்ஸ குருமஹாராஜின் திவ்ய ஸங்கல்பமோ என்னவோ பரப்பிரம்ம ரமணர் இதிலே பரம பக்தராக விரிவதே பொருளாகிவிட்டாற்போல் தோன்றுகிறது.)

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் பெரும்பாலும் குழந்தை பாவத்திலேயே இருந்து பரமாத்மனை காளி மாதாவாக அநுபவித்தவர். அவரே மதுர பாவமுட்பட்ட எல்லா உணர்ச்சிகளாலும் பரம்பொருளை ருசித்தவர்.

ஸ்ரீரமணரும் பக்தராயிருக்கையில் பெரும்பாலும் குழந்தையாயிருந்து பரம்பொருளை அருணாசலேச்வர பிதாவாகவே அநுபவித்தவர். இயேசுநாதன் பிதா பிதா என்று சொன்னாற்போல, ரமணரும் ''தகப்பனாரைத் தேடிக்கொண்டு அவருடைய உத்தரவின்படி'' வீட்டைவிட்டுப் புறப்பட்டதாகத்தான் அவரே பதினேழாம் வயதில் இல்லம் துறந்து கிளம்பியபோது எழுதி வைத்துவிட்டுக் கிளம்பியிருக்கிறார். ஆனால் அவரும் உள்ளுக்குள் நாயிகா பாவ மாதுர்யம் நிரம்பப்பெற்றவர்தான்.

ஸமீப கால பக்திப் பேரநுபவங்களில் நெஞ்சை உருக்கியெடுக்கும் நிகழ்ச்சிகள் இரண்டு. பவதாரிணி தரிசனம் தராவிடில் உயிரை மாய்த்துக் கொள்வது என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கத்தியை வீசிக் கொள்ளப்போனதும், அந்த விநாடியே பராசக்தி பலபலவெனப் பிரஸன்னமானதும் ஒன்று. இன்னொன்று இளம் (வேங்கட) ரமணர் மதுரையிலிருந்து ஓடிவந்து அண்ணாமலையானின் முன் நின்றுகொண்டு, ''அப்பா! வந்தூட்டேன்'' என்று குழறியபடி, அந்த லிங்கத்தை அப்படியே ஆலிங்கனம் செய்துகொண்டதுதான்!

''அப்படியே கட்டிண்டுட்டேன்'' என்றே பகவான் ஸ்பஷ்டமாகச் சொல்லியிருப்பதாக பூஜ்யஸ்ரீ

குஞ்சு ஸ்வாமிகள் தெரிவிக்கிருர். புத்தகம் எதிலுமே இந்த விவரம் வரவில்லையா என்று ஆச்சரியம் கூடத் தெரிவித்தார். 'ஸ்ரீராமகிருஷ்ண விஜய'த்தின் மூலம் இவ்விவரம் விஜயம் செய்ய வேண்டுமென்று இருந்திருக்கும் போலிருக்கிறது!

பிள்ளையாண்டான் வந்து தன்னைக் கட்டிக் கொள்ள வேண்டும் என்றே அப்பாக்காரர் அத்தனும் பெரி . . . ய்ய திருவண்ணுமலை ஆலயத்தை அப்போது ஈ, காக்கை இல்லாமல் வெறிச்சென்று வைத்திருந்திருக்கிருர் பிளேக் வியாதிக்கு பயந்து ஊரே காலியான சமயமாம் அது! குருக்கள்மார் மட்டும் அவரவர் முறைக்காலத்தில் வந்து பூஜை செய்துவிட்டுப் பக்கத்துக் கிராமங்களுக்குப் போய் விடுவார்களாம்.



ஹோவென்று திறந்து கிடந்த கோயிலில் நீண்ட நீண்ட பிராகாரங்களைக் கடந்து நேரே, நே-ரே, அப்பாவிடம் வந்து அட்டென்டன்ஸ் ரிப்போர்ட் செய்து அப்படியே அணைத்துக் கட்டிக்கொண்டார் இளம் (வேங்கட) ரமணர். ''அவ்வளவுதான். அது மட்டும் உள்ளே பற்றி எரிஞ்சுண்டிருந்த தஹிப்பு அப்படியே ஜில்லுனு குளிர்ந்துடுத்து'' என்பாராம் பகவான்.

''அற்புதமான அமுத தாரைகள்'' என்றும், ''அக நெகப் புகுந்தூறும் அமுது'' என்றும், ''உலப்பிலா ஆனந்தமாயத்தேனின் சொறிவு'' என்றும் மணி வாசகம் சொல்வதும், ஸஹஸ்ரார கமல மதுவின் பிரவாஹம் என்று தந்திர சாஸ்திரம் சொல்வதும்தான் அந்தக் குளிர்ச்சிக் கிளர்ச்சி.

வேடிக்கை பாருங்கள். பச்சை மினம்மாவின் மதுரையில் இவருக்கு உடம்பு பற்றி எரிந்தது. இங்கே தேயு க்ஷேத்திரத்தின் அனல் லிங்கத்தைக் கட்டிக் கொண்டதும் தண்மழை பாய்ந்து தாபம் தணிவிக்கிறது. அந்தப் பச்சையேதான் இந்த அருணுசலத்தின் அருணுவாக வந்திருக்கிறது என்று முன்பு பார்த்தோமே!

ஸ்ரீகாஞ்சிப் பெரியவர்கள் சொல்வார்கள் செஞ் சோதி எனப்படும் அருண காமாக்ஷி கோடிஸூர்யப் பிரகாசத்திலேயே கோடிச் சந்திரக் குளிர்ச்சியாக வும் இருப்பாளாம் சிவப்பு கண்ணைக் குத்துகிறது என்று நாம் சொன்னுலும் அதுதான் least disturbing colour என்பதால்தான், வேறெந்த நிற ஒளியும் தாங்காது என்று இருட்டிலே ஃபிலிமைக் கழுவி டெவலப் செய்யுமிடத்திலும் சிவப்பு விளக்கைப் போட்டுக் கொள்கிருர்கள்; சிவப்பு ஹிதம்; வர்ண வரிசையில் ஒரு கோடியில் உக்ர ஊதாவான அல்ட்ரா-வயலெட் எனில் மறு கோடியில் தணிந்த நிறமான சிவப்பே இன்ஃப்ரா-ரெட் ஆக இருக்கிறது; நிறமேயில்லாத வெளிச்சத்தில் முதலில் சிவப்பைப் பிரித்து விட்டால் உடனே மற்ற ஆறு வர்ணங்களும் வெளிப்பட்டு விடும்; ஸ்படிக ஸங்காசமான பிரம்ம சிவத்திலிருந்து செக்கச் செவேலென்று அம்பாள் வெளிப்பட்டவுடன், அதை அடுத்து ஸகல மாயா விலாஸ ஜீவ ஜகத்துக்களும் வந்துவிடுகின்றன—என்றெல்லாம் காஞ்சி ஜகத்குரு சொல்வார்கள். இத்தனைக்கும் திருஷ்டாந்தமாயிருப்பது அருணுசலம் எனும் சிவ சக்தி ஸ்வரூபம்.

பிரம்மத்தின் காதல் சிவப்பாக வெளியாகிறது. அன்பின் வர்ணம் சிவப்பே. ரக்தம் என்பது ரத்தம், பிரேமை இரண்டையும் குறிப்பதல்லவா? அன்பு வந்தவுடன் லோக ஸ்ருஷ்டி ஏற்பட்டு அதில் எல்லா உணர்ச்சிகளும் ஏற்படுகின்றன

எனவே மூலத்தில் ஒன்றப் போகும்போது பரம ஞானியர்களும் இந்தக் காதலில் தோய்ந்தே ஒருமைப்படுகிருர்கள்.

இந்த நிலையில் ரமணர் தனக்கு ரமணனுக அருணுசலனை ஆக்கிக்கொண்டு, தான் ரமணியாகி விடுகிருர்—ஹம்ஸ ஹம்ஸி என்று ஆதி தம்பதியைச் சொல்வதேபோல் ரமண ரமணியாகவும் காண்கி ருேம்.

பகவான் முதன்முதலாக அருளியதே இந்த நாயிகா பாவ ''அக்ஷர மண மாலை'' தான். அதனை மிகமிக அதீத நிலையில் ஆக்கியதாக—அல்லது அதுவே தன்னை ஆக்கிக் கொண்டதாக—பகவான் பகர்வது வழக்கம்.

அதுபற்றி மேலும் சில பார்க்குமுன் அதிலே கண்ணன் ராதா ரமணனுக ஆனதுபோல் அருணுசலனே எப்படி ரமண (அல்லது ரமணி) ரமணன் ஆகிருன் என்பதை மட்டும் அந்தப் பிரேம மந்திர மொழியிலேயே பார்த்து விடுவோம்.

ரமணனென்றுரைத்தேன் ரோசங்கொளாதெனை
ரமித்திடச் செய்வாய் அருணுசலா
.........................................
மாலையளித்தருணுசல ரமண! என்
மாலை யளித்தருள் அருணுசலா

*

# யோகவாசிட்ட சாரம்

திரட்டும் தமிழும் : எம். நாகசுப்பிரமண்யன்

1. புனிதமானதும் களங்கமற்றதும் எல்லையற்றதும் மாயைக்கு அப்பாற்பட்ட சைதன்யமுமாகிய நான், இந்த உடற்செயலில் ஈடுபடும்போது வேறொருவருடைய உடலைப் போன்று கருதுகிறேன்.

2. மனம், புத்தி, ஐம்புலன்கள் ஆகியவை எல்லாம் பிரம்மத்தின் விளையாட்டாகும். அவை பொய்யானவை; உள்நோக்கு இல்லாத காரணத்தினால் அவை இருப்பவை போன்ற தோற்றத்தைத் தருகின்றன.

3. நான் சந்தேகத்திற்கு இடமில்லாமல் மூன்று உலகங்களைப் பற்றியும் ஐந்து இந்திரியங்களைப் பற்றியும் நன்றாகத் தெரிந்துகொண்டேன். நான் சுத்த சைதன்யமாகவே இருக்கிறேன்.

4. நான் எல்லாவற்றிற்கும் மேலானவன், எங்கும் நிறைந்திருப்பவன், ஆகாயம் போல எங்கும் பரந்து விரிந்திருப்பவன், நான் சத்பொருள் எதுவோ அதுவாகவே இருப்பவன். இதற்கு மேல் என்றால் என்ன சொல்ல முடியும்?

5. தமது சுற்றத்தாரைக் கண்டும் அவர்களை ஒரு குருடனைப் போலப் பார்க்காமல் இருப்பவர் (அவர்களிடமிருந்து விலகித் தொலைவில் ஒதுங்கியிருப்பவர்), நல்ல பாம்பைக் கண்டு நடுங்குவதைப் போல நண்பர்களிடம் பயப்படுபவர், புலனின்பங்களையும் நோய்களையும் சமமாகக் கருதுபவர், பெண்களின் கூட்டுறவை அற்பப் புல்லுக்கு சமமாகக் கருதி ஒதுக்குபவர், நண்பனுக்கும் பகைவனுக்கும் வேறுபாடு காணாதவர்—இத்தகைய சான்றோர்கள்தாம் இம்மையிலும் மறுமையிலும் மகிழ்ச்சி அடைகிறார்கள்.

6. மனதில் சூட்சுமமாகப் புதைந்திருக்கும் எல்லா இயல்புகளையும் உதறித் தள்ளுவதுதான் முக்திக்குச் சிறந்த வழி என்று புத்திமான்கள் கூறியுள்ளனர்.

7. விடுதலை என்பது வானத்துக்கு அப்பாலோ, பூமிக்குக் கீழே உள்ள உலகத்திலோ, நாம் வசிக்கும் இந்தப் பூமியிலோ கிடையாது. எல்லாவித ஆசைகளையும் அடியோடு துடைத்துத் தள்ளி, மனதைப் புறவுலகத்தின் தொடர்பிலிருந்து விடுவித்துக் கொள்வதுதான் மோட்சமாகும்.

8. பிரம்மத்தைத் தவிர இரண்டாவது பொருளே இல்லை என்று சொல்லத் தக்க சுத்த சைதன்ய நிலையில் நிலைபெற்றிருப்பவனுக்குப் பந்தம் அல்லது விடுதலை என்ற கேள்விக்கு இடம் எங்கே?

9. 'இதுதான் அவன்', 'நான்தான் இது', 'அது என்னுடையது'—இவை போன்ற எண்ணங்களின் தொகுதியாக மனம் இருந்து கொண்டிருக்கிறது. இத்தகைய பொய்யானவையும் தவறானவையுமான எண்ணங்களைப் பற்றி நன்றாக ஆழ்ந்து யோசித்தால் மனம் தானாகவே கரைந்து விடுகிறது.

10. ஓ ராமா! மூன்று உலகங்களையும் அவற்றில் கிடைக்கும் சுகபோகங்களையும் உலர்ந்த புல்லுக்குச் சமமாக நினைத்து, உள்நோக்கிய மனதுடன் ஞானம் என்ற நெருப்பில் அந்தச் சுகபோக இச்சைகளை எவன் எரித்து விடுகிறானோ, அவன் மனதின் கற்பனையாகிய பொய்யான மாயத் தோற்றங்களிலிருந்து விடுபடுகிறான்.

11. மனம் விழிப்புநிலையில் பயங்கரமாகவும், கனவுநிலையில் அமைதியாகவும், ஆழ்ந்து உறங்கும் போது மந்த நிலையிலும் இருக்கிறது. மரணத்தில் மனதிற்கு மூன்று நிலைகளும் இல்லை.

12. தண்ணீரிலுள்ள அசுத்தத்தைத் தேற்றாங்கொட்டையின் தூள் நீக்கிவிட்டுப் பிறகு தண்ணீரிலேயே ஒன்றாகக் கரைந்து விடுகிறது. அது போலவே, மனமும் தன்னிடம் இருக்கும் அசுத்தங்களையும் ஓட்டங்களையும் களைந்துவிட்டு, முடிவில் தன்னுள் இருக்கும் ஆத்மாவில் ஒன்றாகக் கலந்து விடுகிறது.

13. மனம் கரைந்தவுடன் ஒன்று, பல என்ற வேற்றுமைகளெல்லாம் கரைந்து போய்விடுகின்றன. அதன்பிறகு துன்பங்களால் தொட இயலாததும், நித்தியமானதும், சாந்தமானதுமாகிய பரம்பொருள் ஒன்று மட்டுமே எஞ்சி நிற்கிறது.

14. தனக்குள் இருக்கும் ஆத்மாவைப் பற்றித் தனக்குத் தானே தீவிர விசாரணையில் ஈடுபடுவது ஆத்மஞானத்திற்கு வழி வகுக்கும். எதை அறிந்து கொள்ள வேண்டுமோ, அது பாலில் இருக்கும் இனிப்பைப் போன்று நம்மிடமே இருக்கிறது.

15. ஒருவன் தனது உள்ளத்தில் பரபரப்பின்றி அமைதியும் குளுமையும் கொண்டிருந்தால், புறவுலகமும் அவனுக்குக் குளுமை நிறைந்ததாகவே இருக்கும். அவ்விதமின்றித் தன் உள்ளத்தில் பரபரப்பும் குழப்பமும் கொண்டிருப்பவனுக்குப் புறவுலகமும் கொழுந்துவிட்டெரியும் நெருப்புப் போன்று துன்பம் தருவதாகவே இருக்கும். *



# ராமகிருஷ்ண மடம், சென்னை - 600 004

## 1980 ஏப்ரல் மாத நிகழ்ச்சிகள்

ஸ்ரீசங்கரர் & ஸ்ரீராமானுஜர் ஜயந்திகள்
19-4-80 சனி : ஜயந்தி நாள் பூஜை

20-4-80 ஞாயிறு : ஸ்ரீசங்கரர் & ஸ்ரீராமானுஜர் ஜயந்தி விழாப் பொதுக்கூட்டம்
மாலை 5-30 மணிக்கு பேசுவோர் : சுவாமி கபீரானந்தர் [தலைப்பு : ஸ்ரீசங்கரர்]
திரு கா. ஸ்ரீ. ஸ்ரீ. [தலைப்பு : ஸ்ரீராமானுஜர்]

சத்சங்கம் : ஞாயிறுதோறும் மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை
ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (6-4-80 & 27-4-80)
ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (13-4-80)

| | | |
|---|---|---|
| 6-4-80 | 1. | ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம்—திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் |
| 13-4-80 | 2. | ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்—திரு வி. எஸ். வி. குருசுவாமி சாஸ்திரிகள் |
| 27-4-80 | 3. | ஸ்ரீராமபிரான்—ஸ்ரீமத் சுவாமி கமலாத்மானந்தர் |

மாலை 5-35 மணி முதல் 6-30 மணி வரை சுவாமி கபீரானந்தர் அவர்கள் ஸ்ரீமத் பகவத்கீதை என்ற தலைப்பில் ஏப்ரல் 6, 13, 27 ஆகிய தேதிகளில் ஆங்கிலத்தில் சொற்பொழிவு நிகழ்த்துவார்கள்.
வாரநாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள் (மாலை 5-45 மணிக்கு)

| | | |
|---|---|---|
| 1. | திங்கள் | ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்—சுவாமி அமிர்தானந்தர் |
| 2. | செவ்வாய் | பக்தியோகம்—சுவாமி கபீரானந்தர் |
| 3. | புதன் | முண்டக உபநிஷதம் —சுவாமி அமலாத்மானந்தர் |
| 4. | வியாழன் | கதாமிர்தப் பாடல்களுக்கு விளக்கம்—சுவாமி தன்மயானந்தர் |
| 5. | வெள்ளி | ஆன்மிக வாழ்க்கை—சுவாமி கமலாத்மானந்தர் |
| 6. | சனிக்கிழமை | (19-4-80 மட்டும்) அத்யாத்ம இராமாயணம்—திரு. பி. ராமகிருஷ்ணன் |
| 7. | சனிக்கிழமை | (12-4-80 & 26-4-80 மட்டும்) விஷ்ணு புராணம் —டாக்டர் என். வீழிநாதன் |

11-4-80 & 25-4-80 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

வேறு சில நிகழ்ச்சிகள்:
ஸ்ரீ புத்த ஜயந்தி (30-4-80)

மே மாதம் 2, 3, 4 ஆகிய தேதிகளில் வடாற்காடு மாவட்டத்தைச் சேர்ந்த சாத்தனூரில் ஸ்ரீராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த சாதுக்கள் மூன்று நாள் அந்தர்யோகம் நடத்துவார்கள். இது சம்பந்தமான விவரங்களை The Organiser, Divine Communion at Sathanur Dam, Sri Ramakrishna Math, Madras-600 004 என்ற முகவரிக்கு எழுதி தெரிந்து கொள்ளலாம்.

6-4-80 ஞாயிறு மாலை 5-30 மணிக்கு ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்கள் என்ற தலைப்பில் சுவாமி கீர்த்திதானந்தர் அவர்கள் உரை நிகழ்த்துவார்கள். இடம் : 7, கெல்லீஸ் ரோடு, கீழ்ப்பாக்கம்

4, 11, 18 ஆகிய தேதிகளில் மாலை 6-15 மணிக்கு சுவாமி ராகவேசானந்தர் அவர்கள் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணமும், பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் என்ற தலைப்பில் சொற்பொழிவும் நிகழ்த்துவார்கள். இடம் : 18, 9-ஆவது லேன், சாஸ்திரி நகர்.

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தொலைபேசி : 71231

தலைவர்,
ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

# சென்னை, ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் விசேஷ தினங்கள் 1980—81

## மே 1980

| | |
|---|---|
| ஞாயிறு 4 | புத்த ஜெயந்தி பொதுக்கூட்டம் |
| ஞாயிறு 11 | ஏகாதசி |
| செவ்வாய் 13 | ஸ்ரீ ஸ்ரீ பலகாரிணி காளி பூஜை |
| ஞாயிறு 25 | ஏகாதசி |

## ஜூன் 1980

| | |
|---|---|
| திங்கள் 9 | ஏகாதசி |
| செவ்வாய் 24 | ஏகாதசி |
| சனி 28 | ஸ்நான பூர்ணிமா |

## ஜூலை 1980

| | |
|---|---|
| செவ்வாய் 8 | ஏகாதசி |
| புதன் 23 | ஏகாதசி |
| சனி 27 | குருபூர்ணிமா |

## ஆகஸ்ட் 1980

| | |
|---|---|
| புதன் 6 | ஏகாதசி |
| வெள்ளி 8 | சுவாமி இராமகிருஷ்ணானந்த ஜயந்தி |
| ஞாயிறு 10 | சுவாமி இராமகிருஷ்ணானந்த ஜயந்தி பொதுக்கூட்டம் |
| வெள்ளி 22 | ஏகாதசி |
| ஞாயிறு 24 | ஓணம் |
| செவ்வாய் 26 | சுவாமி நிரஞ்ஜனானந்த ஜயந்தி |

## செப்டம்பர் 1980

| | |
|---|---|
| திங்கள் 1 | ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தி |
| வெள்ளி 5 | ஏகாதசி |
| ஞாயிறு 7 | ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தி பொதுக்கூட்டம் |
| திங்கள் 8 | சுவாமி அத்வைதானந்த ஜயந்தி |
| சனி 13 | விநாயக சதுர்த்தி |
| சனி 20 | ஏகாதசி |

## அக்டோபர் 1980

| | |
|---|---|
| வியாழன் 2 | சுவாமி அபேதானந்த ஜயந்தி |
| சனி 4 | ஏகாதசி |
| வியாழன் 9 | மகாளய அமாவாசை & சுவாமி அகண்டானந்த ஜயந்தி |
| வெள்ளி 10 | நவராத்திரி ஆரம்பம் |
| புதன் 15 | ஸ்ரீ ஸ்ரீ துர்க்கா பூஜை (ஷஷ்டி) |
| வியாழன் 16 | மகாசப்தமி |
| வெள்ளி 17 | மகாஷ்டமி (சந்தி பூஜை (8–46 To 9-34 p.m.) |
| சனி 18 | மகாநவமி |
| ஞாயிறு 19 | விஜய தசமி (மாலை வழிபாட்டிற்குப் பிறகு 'சாந்தி ஜல்') தெளித்தல் |
| திங்கள் 20 | ஏகாதசி |
| வியாழன் 23 | ஸ்ரீ ஸ்ரீ லக்ஷ்மி பூஜை (மாலை வழிபாட்டிற்குப் பிறகு) |

**நவம்பர் 1980**

| | |
|---|---|
| திங்கள் 3 | ஏகாதசி |
| வெள்ளி 7 | ஸ்ரீ ஸ்ரீ காளி பூஜை தீபாவளி (மாலை வழிபாட்டிற்குப் பிறகு) |
| செவ்வாய் 18 | ஏகாதசி |
| புதன் 19 | சுவாமி சுபோதானந்த ஜயந்தி |
| வெள்ளி 21 | சுவாமி விஞ்ஞானந்த ஜயந்தி |

**டிசம்பர் 1980**

| | |
|---|---|
| புதன் 3 | ஏகாதசி |
| செவ்வாய் 16 | சுவாமி பிரேமானந்த ஜயந்தி |
| வியாழன் 18 | ஏகாதசி |
| புதன் 24 | கிறிஸ்மஸ் (மாலை வழிபாட்டிற்குப் பிறகு) |
| ஞாயிறு 28 | தூய அன்னை ஸ்ரீ சாரதாதேவியார் ஜயந்தி விழா |

**ஜனவரி 1981**

| | |
|---|---|
| வியாழன் 1 | கல்பதரு தினம் சுவாமி சிவானந்த ஜயந்தி |
| வெள்ளி 2 | ஏகாதசி |
| ஞாயிறு 11 | சுவாமி சாரதானந்த ஜயந்தி |
| புதன் 14 | பொங்கல்-மகா சங்கராந்தி |
| வெள்ளி 16 | ஏகாதசி |
| திங்கள் 19 | சுவாமி துரியானந்த ஜயந்தி |
| செவ்வாய் 27 | சுவாமி விவேகானந்த ஜயந்தி |
| சனி 31 | ஏகாதசி |

**பிப்ரவரி 1981**

| | |
|---|---|
| ஞாயிறு 1 | சுவாமி விவேகானந்த ஜயந்தி பொதுக்கூட்டம் |
| வெள்ளி 6 | சுவாமி பிரம்மானந்த ஜயந்தி |
| ஞாயிறு 8 | திரிகுணதீதானந்த ஜயந்தி |
| திங்கள் 9 | ஸ்ரீ ஸ்ரீ சரஸ்வதி பூஜை—வசந்த பஞ்சமி |
| ஞாயிறு 15 | ஏகாதசி |
| புதன் 18 | சுவாமி அத்புதானந்த ஜயந்தி |

**மார்ச் 1981**

| | |
|---|---|
| திங்கள் 2 | ஏகாதசி |
| புதன் 4 | மகா சிவராத்திரி |
| ஞாயிறு 8 | பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண ஜயந்தி |
| திங்கள் 16 | ஏகாதசி |
| வெள்ளி 20 | டோல் பூர்ணிமா—ஸ்ரீ சைதன்ய ஜயந்தி |
| ஞாயிறு 22 | ஸ்ரீ சைதன்ய ஜயந்தி பொதுக்கூட்டம் |
| செவ்வாய் 24 | சுவாமி யோகானந்த ஜயந்தி |

**ஏப்ரல் 1981**

| | |
|---|---|
| புதன் 1 | ஏகாதசி |
| ஞாயிறு 5 | தெலுங்கு வருஷப் பிறப்பு (யுகாதி பண்டிகை) |
| ஞாயிறு 12 | ஸ்ரீ ராம நவமி |

---

குறிப்பு 1. ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

2. ஜயந்தி என்று குறிப்பிடப்பட்டிருக்கும் பெரியோர்களின் பிறந்த நாட்களின்போது மாலை வழிபாட்டிற்குப் பிறகு அந்தந்த பெரியோர்களின் வாழ்வு—வாக்கு பற்றிய சொற்பொழிவுரைகள் நடைபெறும்.

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தலைவர்,

**ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004**

# காந்தியடிகளின் பொன்மொழிகள்




* உண்மையைத் தவிர வேறு எந்தக் கடவுளுக்கும் நான் சேவை செய்வதில்லை. எனக்குக் கடவுள் என்றாலும் ஒன்றுதான்; உண்மை என்றாலும் ஒன்றுதான்.

* வக்கீல்களின் கடமை என்ன தெரியுமா? எப்போதும் நீதிபதிகளின் முன் உண்மையை எடுத்துக்காட்டி, அந்த உண்மையை நீதிபதிகள் கண்டறிந்து கொள்வதற்கு உதவி செய்ய வேண்டியதே; குற்றவாளிகளை நிரபராதிகள் என்று ஒருபோதும் அவர்கள் ருஜுப்படுத்தக் கூடாது.

* வரதட்சிணை கொடுத்தால்தான் கல்யாணம் செய்துகொள்ள முடியும் என்று நிபந்தனை போடுகிறவன் தன் கல்வியையும், தன் தேசத்தையும் தாழ்த்துகிறான்; பெண்மையையே அவமானத்திற்கு ஆளாக்குகிறான். என் பராமரிப்பில் ஒரு பெண் இருக்கிறாள் என்று வைத்துக் கொள்வோம். அப்போது அவளை மனைவியாக ஏற்றுக்கொள்ள ஒரு தம்பிடி காசைக்கூட ஒருவன் எதிர்பார்ப்பான் என்றால் அவனுக்கு நான் அவளைக் கல்யாணம் செய்து கொடுக்கமாட்டேன்; அதற்குப் பதிலாக அவளை அவளுடைய வாழ்நாள் முழுவதும் கன்னிப் பெண்ணாகவே வைத்திருப்பேன்.

